ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 32

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த மாதந்தோறும் வெளிவரும் பத்ரிகை

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| 3 ஸம் | மேஷ 1951 கரஹு சித்திரையில் செய்ய திருவாதிரை | 8 இதழ் |
|---|---|---|

## “இன்றுலகீர் சித்திரையிலேய்ந்த திருவாதிரை நாள்”

* எதிராசர்தம் பிறப்பால் நாற்றிசையுங்கொண்டாடும் நாளாகிய இந்நன்னாள் * ஆழ்வார்கள் தாங்களவதரித்த நாள்களிலும் வாழ்வானநாள் நமக்கென்று நம் மணவாள மாமுனிகள் கொண்டாடுகின்றது. எம்பெருமானாருடைய திருவவதார நன்னாள் ஆழ்வார்களின் அவதாரநாள்களிற் காட்டிலும் எப்படி மேம்பட்டதாகும்? எந்தத் திருவுள்ளத்தினால் மணவாளமாமுனிகள் இங்ஙனே யருளிச்செய்தார்? என்று சிலர்கேட்பதுண்டு. இதற்குப் பெரியார் பேசுவதாவது, ஆழ்வார்கள் திவ்யப்பிரபந்தங்களை மூலம் மாத்திரம் அருளிச்செய்து வைத்தார்களேயல்லது அவற்றின் சீரிய பொருள்களை யறிவதற்கு ஒருபாயமும் செய்திலர். எம்பெருமானார்க்கு முற்பட்ட ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் முதலான ஆசாரியர்களும் தங்களடிபணிந்தவர்களுக்கு ஏதோ அஷ்டகர்ணமாக உபதேசித்து வந்தார்களேயல்லது இன்று நாமும் வாழும்படியாக ஒரு விரகும் செய்திலர். ஸ்வாமியெம்பெருமானாரோ வென்னில், * பாருலகிலாசையுடையோர்க்கெல்லா மாரியர்காள்! கூறுமென்று பேசி வரம்பறுத்தார்பின் * என்று மணவாளமாமுனிகள் தாமே யருளிச்செய்யும்படியாக உலகமெல்லாம் வாழத் திருவுள்ளம்பற்றி * தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்தஇதத்தாயிராமாநுசன் * என்றும், * மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே * என்றும் சொல்லுகிறபடியே ஆழ்வாரருளிச் செயல்களை பஹுமுகமாக வளர்த்து, அவற்றுக்கு வியாக்யானங்களவதரிக்க நியமனமும் தந்தருளி இவ்வழியாலே உலகமெல்லாம் வாழ்வதற்குக் காரணபூதரானபடியாலே இவருடைய திருவவதார நன்னாள் ஆழ்வார்கள் தாங்களவதரித்த நாள்களிலும் வாழ்வான நாளேயென்னத்தட்டில்லை.

இப்போராசிரியருடைய மஹோத்ஸவம் ஸகல திவ்ய தேசங்களிலும் நடைபெற்றாலும் திருவவதார ஸ்தலமாகிய ஸ்ரீபெரும்பூதூரில் லோகோத்தரமான முறையில் வெகு அற்புதமாக நடைபெற்று நிறைவேறியது. திவ்யதேசங்களுக் கெல்லாம் விளைந்திருந்த உபப்லவம் காரண

மாக இத்தலத்திலும் கீழ் நான்கு வருஷங்களில் உத்ஸவவைபவங்கள் குறையுற்றிருந்தன. அக்குறைகளொன்றுமின்றியே இவ்வருஷத்தில் * பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம் நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கு யாதொன்றுமில்லை........கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம் * என்னும் படியாகப் பெரிய கிதயுகப் பேரின்பவெள்ளம் பெருக நடைபெற்றதானது நலமந்த மில்லதோர் நாட்டிலுங் காணமுடியாதவிசேஷ மென்னத்தகும். பெருந்திரளான ஸ்வாமிகள் உபயவேத பாராயண கோஷ்டிகளையும் வெகு அழகாக நடத்திவந்தார்கள். கைங்கரியங்களில் விலகியிருந்த உள்ளூர் ஸ்வாமிகளும் பலர் முன்போல் அந்வயித்து ஸத்தைபெற்று ஸந்தோஷிக்க ப்ராப்தமாயிற்று.

இனி நம்முடைய வாழ்நாளில் திவ்யதேசாநுபவ ப்ரஸக்தியே யில்லையென்றும், அது வேண்டாமென்றும், அந்த ஸ்மரணமுங் கூட நமக்குப் பாதகமென்றும் உறுதிகொண்டு ஸர்வாத்மநா விலகியிருப்பாரும் சிலருளர். அன்னவர்களைப் பற்றி இங்கு நாம் விஜ்ஞாபிக்கக் கூடியது யாதுமில்லை. அவர்களுடைய அத்யவஸாயம் நித்ய ஸ்ரீர் நித்யவங்களமாக வாழ்கவென்றும் ஆசாஸிக்கிறோம். திவ்யஸூரிகளிடத்திலும் திவ்யமரபந்தங்களிடத்திலும் திவ்யதேசங்களிடத்திலும் நாபியிலூறின த்வேஷம் சிலர்க்கு இயற்கையாகவுண்டு; அவர்கள் ஏதோவொரு பாக்கிய விசேஷத்தினால் சிலகாலம் திவ்யதேசங்களில் ப்ராவண்யத்தை அபிநயிக்க நேர்ந்திருந்தது. அந்த காலம்போய் இனி அந்தகாலம் வரையில் திவ்யதேசங்களில் த்வேஷத்தையே உலகமறியக் காட்ட நேர்ந்துவிட்டதென்றால் இதில் வியப்பொன்றுமில்லை. விச்வகுணதர்சநாலில் ஸ்ரீபூதபுரீவர்ணனத்தில் முந்நூறு வருஷங்களுக்கு முன்பு "தைர் த்வே நித்யதயா ச்ரிதே யதசநம் யாச வ்யவயாக்ரியா" [சாஸ்த்ரோக்தங்களான கருமங்களெல்லாம் காம்யகர்மங்களென்று ஒதுக்கப்பட்டு, உண்பதும் விஷயபோகம் செய்வதுமாகிய இரண்டே நித்யகர்மமாகப் பரிக்ரஹிக்கப்பட்டன] என்று சொல்லப்பட்ட விஷயம் பரிபூர்ணமாகப் பலிப்பதற்கு இவ்வளவு அவகாசம் வேண்டியிருந்ததுபோலும்.

பகவத்கீதை ஏழாவது அத்யாயத்தில் (15)இவர்களுக்காகவே ஒரு ச்லோகம் அவதரித்துள்ளது; அதாவது. *ந மாம் துஷ்க்ருதிநோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா:, மாயயாபஹ்ருதஜ்ஞாநா ஆஸுரம் பாவமாச்ரிதா: * என்பது. இதில் நாலாவது பாதமே உயிரானது. "ஆஸுரீம் யோநிமாபந்நா:" என்று (16-20) மற்றோரிடத்திலுமுள்ளது. * ஆஸுரீ மாயா * என்று யஜுர்வேதத்திலும் நாலாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் ஓதிவைத்தது. இப்படிப்பட்ட ஆஸுரி மாயையில் சிக்குண்டவர்களுக்கு வாழ வழியேது?

எம்பெருமான் ராமக்ருஷ்ணதிருபேண விபவாவதாரங்கள் பண்ணின காலத்திலே * அவஜாநந்தி மாம் மூடா: * என்று அவன்தானே பரிதபிக்கும்படி அவனை அவஜ்ஞை பண்ணினவர்கள் பல்லாயிரவரிருந்தனர். விரலிட்டு எண்ணக்கூடிய சிலரே உகந்து அடிபணிந்து உய்ந்துபோனார்களென்று கேள்விப்படுகிறோம். அப்போது அவஜ்ஞை பண்ணினவர்களே இப்போதும் பிறந்து களித்தலையிடுவதும் கதவடைப்பதுமாயிருக்கிறார்களென்பதில் ஐயமில்லை. ஐயாயிரமாண்டுகட்கு முன்னமே "ஐயமொன்றில்லையரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல் உய்யும் வகையில்லைதொண்டீர்" என்கிற பாசுரம் அவதரித்துள்ளதன்றோ.

* அர்ச்யஸ் ஸர்வஸஹிஷ்ணு: * என்னப்பட்ட பகவான் ஸர்வம்ஸஹே என்றிருக்க நாம் அஸஹிஷ்ணுக்களாயிருந்து யாது பயன்? பகவான் விபவாவதாரங்கள் செய்தது கிடையாதென்று சாதிப்பாருடைய திரளிலே நாம் சேர்ந்தவர்களல்லோம். அவதாரங்களையும் அவதார சேஷ்டிதங்களையும் நன்கிசைந்து நிச்சலும் போற்றுங் குடியிலே பிறந்தவர்

ளோம். * மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடு பட்டைக்கிழித்துக் காம்புதுகிலவைகீறி நிச்சலுந் தீமைகள் செய்வாய்!* என்றும், *[illegible]* [ப்ரத்யத்வகுஞ்ஜத்ருமம் ராதாமாதவயோர் ஜயந்தி யமுநாகூலே ரஹ:கேளய:] என்றும் இப்புடைகளிலே அல்லும் பகலும் நாம் அநுஸந்திக்கிற சேஷ்டிதங்கள் சாஸ்த்ரவிருத்தங்களேயொழிய சாஸ்த்ரஸம்மதங்களென்று யாரும் நினைக்க முடியாது. இந்த சேஷ்டிதங்களையே *சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன் முதலானோர் தூஷித்தொழிந்தது. அதற்காகவே * பாவிகாள்! உங்களுக்கேச்சுக்கொலோ!* என்று ஆண்டாள் வயிறுருகிப் பேசினது. இந்த சேஷ்டிதங்களெல்லாம் பகவான்தானே மநஸ்கரித்துச் செய்தவையேயொழியப் பிறர்செய்து ஏறிட்டவையல்ல. இப்படி தான் செய்த சேஷ்டிதங்களை இகழ்வார் அதோகதியிற் போவார்களென்றும், உகப்பார் நல்வீடு பெறுவார்களென்றும் தானே கீதையில் சொல்லிவைத்தான்: * ஜந்ம கர்ம ச மே திவ்யம் * இத்யாதிகள் காண்க. இதையடியொற்றியே கூரத்தாழ்வான் * யத் த்வத் ப்ரியம் ததிஹ பண்யமபுண்யமந்யத் நாந்யத் தயோர் பவதி லக்ஷணமத்ர ஜாது, தூர்த்தாயிதம் தவ ஹி யத் கில ராஸகோஷ்ட்யாம் தத்கீர்த்தநம் பரமபாவநமாமநந்தி.* என்று ஒருவராலுமசைக்க முடியாத சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷமாக அருளிச்செய்தார்.

இப்போது அர்ச்சாவதார பகவானிடத்திலே எந்த சேஷ்டிதங்களை நாம் காண்கிறோமோ, எந்த சேஷ்டிதங்களை யிட்டுப் பரித்யஜித்துச் சிலர் விலகி நின்றொழிகிறார்களோ இவை பிறர்செய்த சேஷ்டிதங்களே யொழிய பகவான்தானே செய்தவையல்ல; ஆனால் * தேந விநா த்ருணாக்ரமபி ந சலதி * மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே * இத்யாதிகளில் திட நம்பிக்கை யுள்ளவர்கள் இவற்றையும் பகவான்தானே செய்துகொண்ட செயலாகவேதான் கொள்ளவேண்டும். சிசுபாலாதிகளால் பழிக்கப்பட்ட விபவாவதார சேஷ்டிதங்களோடு, இப்போது வெறுக்கப்படும் அர்ச்சாவதார சேஷ்டிதங்களோடு ஒரு வாசி யில்லாமையை யாவரும் குறிக்கொள்ளவேணும். வாசி கொள்ளுவதாயிருந்தால் இங்ஙனே வாசி கொள்ளலாம்; (அதாவது) விபவாவதார சேஷ்டிதங்கள் எம்பெருமான்தானே உகந்து செய்தவை; இப்போதைய அர்ச்சாவதார சேஷ்டிதங்கள் எம்பெருமான் தானே செய்தவையல்ல, பிறருடைய அநியாயமான நிர்ப்பந்தத்தினால் ஏற்பட்டவை: ஆகவே அதற்கும் இதற்கும் நெடு வாசியுண்டு—என்று சொல்லலாம். இதை இப்படியே ஒப்புக்கொள்வோம். எம்பெருமான் தானே செய்த தப்புக் காரியங்களையே நாம் பாவனமென்று கொள்ளும்போது பிறருடைய நிர்ப்பந்தத்தினால் ஏற்பட்டதாய் எம்பெருமான் தானும் உகந்து கொண்டதான தப்புக்காரியத்தைப் பாவனமென்று கொள்ள என்ன தடை ? பாவனமென்று கொள்ள மனம் இடங்கொடாவிட்டாலும் அதைப் பழிக்கவோ -அதையிட்டு விலகவோ மனங் கொள்ளாமலிருக்க ப்ராப்தம். அரசாங்க நிர்ப்பந்தமடியாக ஏற்பட்டதாதலாலும், எம்பெருமான் இதை விலக்குகிற வரையில் அவனுகந்து ஏற்றுக்கொண்டதாகவே நினைக்கக் கூடியதாதலாலும், *திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும் * என்கிற நம்மாழ்வார் பாசுரத்தினால் அரசர்கள் எம்பெருமானோடொக்க மதிக்கத் தக்கவர்களா யிருப்பதாலும் ஸர்வஸஹிஷ்ணுவானவனுக்கு ஸஹ்யமாய்ப் போனவை அவனடியார்களுக்கும் ஸஹ்யமாக வேண்டியது தவிர வேறில்லையே.

ரஜஸ்வலா விவாஹமென்கிற விஷயம் வைதிகர்களுக்கு எவ்வளவு அருவருக்கத் தக்கதென்பதை நாம் விவரிக்க வேண்டுமோ ? இந்தச் சட்டம் ஏற்படாதபடிக்கு வைதிகர்களும் லௌகிகர்களும் ப்ரஹ்மப்ரயத்னங்கள் செய்தவற்றுக்கு ஓரளவுண்டோ ? அது

பலிக்கவில்லையென்றால் அதற்காக யார் என்ன செய்யமுடியும்? "இக்காலத்திற்கு இப்படித்தான் நடைபெற வேணுமென்று எம்பெருமான் திருவுள்ளம் போலும்" என்று நாம் மனஸ் ஸமாதானமடைவது தவிர வேறென்றுண்டோ? பெண்களின் விவாஹத்திற்குச் சட்டம் ஏற்பட்டதேயொழிய ஆண்களின் உபநயனத்திற்கு ஒரு சட்டமும் ஏற்படவில்லை ஏற்படப்போவதுமில்லை. இருபது வயதாகியும் உபநயனமாகாத பிள்ளைகள் வளர்ந்து செல்லுங் குடும்பங்கள் கணக்கிலடங்குமோ? அப்படிப்பட்ட குடும்பங்களோடும், வாசாமகோசரமான துராசாரங்கள் மலிந்த குடும்பங்களோடும் கலந்து பழகாத வைதிகர் ஒருவருளரோ?

"ஒருவருளரோவென்று கேட்பதேன்? பலருளர்" என்று சிலர் பதில் சொல்வதாகவும் வைத்துக் கொள்வோம்; *கொண்டபெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும் கண்டதோடு பட்டதல்லால் காதல்மற்றியாதுமில்லை* என்று பழிக்கப்பட்ட அவ்வுறவினர்களைத் தாராளமாக விட்டுத் தொலைக்கலாம்; *என்னை நெகிழ்க்கிலு மென்னுடை நன்னெஞ்சந்தன்னை யகல்விக்கத் தானுங்கில்லானினி * நல்கியென்னை விடான் நம்பிநம்பியே* என்று, நாம் விட்டாலும் நம்மை விடமாட்டாதே மடிமாங்காயிட்டு வாரிப்பிடியாகப் பிடிக்கு மெம்பெருமானை நாம் ஒருபோதும் விட்டகல ப்ரஸக்தியில்லை.

கீதாசார்யன் ஆச்சரியமாக ஒரு வார்த்தை சொல்லியுள்ளான்; *யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி பாரத!, அப்யுத்தாநமதர்மஸ்ய* என்று. இந்த ச்லோகத்தில் "தர்மஸ்ய நாசோ பவதி" என்றாவது "தர்மஸ்ய க்ஷயோ பவதி" என்றாவது சொல்லாமல் 'க்லாநிர்பவதி' என்று சொல்லியிருக்கிறான். தர்மதேவதை ஒரு நாளும் நாசமடையாதென்றும், ஏதோ கால வைகுண்யத்தால் சிறிது வாட்டமடையுமென்றும், அப்படி தருமம்வாடி அதர்மம் தலையோங்கினாலும் அதற்குப் பரிஹாரம் செய்யவேணடிய பொறுப்பு தன்னுடையதென்றும் எம்பெருமான் காட்டியுள்ளான். இப்படி ப்ரதிஜ்ஞை செய்தருளினவன் பரிஹாரமொன்றும் செய்திலனாகில், அந்த கீதையிலேயே "தஸ்மாத் அபரிஹார்யேர்த்தே ந த்வம் சோசிதுமர்ஹஸி" (2–27) என்று காட்டியுள்ளதுதான் நமக்குத் தஞ்சம்போலும் என்று நாம் கொள்ள வேண்டியது தவிர வேறுண்டோ? நேரக்கூடாதது நேர்ந்துவிட்டால் அதற்கு நாம் என்ன செய்யமுடியும்? இது மிகத் தவறான காரியம்' என்று சாஸ்திரங்கள் காட்டி வலிதாக ஆக்ஷேபிக்கலாம்; மனவருத்தங்காட்டிச் சிலகாலம் விலகி நிற்கலாம். ஆகாயத்தை நோக்கியழலாம். இவையெல்லாம் செய்து பார்த்தோம். யாவஜ்ஜீவம் விலகி நிற்பதே கதியென்று கொள்வார் விவேகிகளாகார்.

ஆலயங்கள் சாஸ்திரக் கட்டளையிலே ஏற்பட்டவையாதலாலும், சாஸ்திரவரம்பு அழிந்ததென்றால் அந்த ஆலயங்கள் வழிபாடுசெய்ய யோக்யதையற்றவை யாதலாலும், இவ்விஷயத்தில் நமக்கு சாஸ்திரமே கைவிளக்காதலாலும் எத்தனை காலமானாலும் விலகி நிற்பது தவிர வேறுவழியில்லை யென்று சாஸ்த்ரநிஷ்டர்கள் வாதிக்கக் கூடியதுண்டு; இது ஸமஞ்ஜஸமான வாதமே. நாமும் இந்த வாதத்தினாலன்றியே சில வருஷங்கள் விலகிநின்றது. இந்த வாதத்தை க்ரந்த மூலமாகவும் பஹுமுகமாக ப்ரபஞ்சனம் செய்திருப்பது நாமே. அந்த நமது க்ரந்தங்களைக் கண்டிக்கப் பலர் முயன்றும் வ்யர்த்த தூஷண பரிஹாஸங்களினால் ஏடுகளை நிரப்பினர்களேயல்லது சாஸ்த்ரீயமாக விடைகூற சக்தரானார்களில்லை. சாஸ்த்ரைக சக்ஷுஸ்ஸுக்களாயிருப்பார் விடைகூறவும் முடியாது. ஆனாலொன்று கேளீர். ஸாமான்ய சாஸ்திரமென்றும் விசேஷ சாஸ்திரமென்றும் இரண்டுண்டே; இரண்டாவதில் நின்று பார்க்கவேணும். காமன் காலிலே விழுவது மடலெடுப்பது நோன்புநோற்பது முதலான

இவை செய்யத்தகாத காரியங்களென்று நிஷ்கர்ஷித்த -சாஸ்த்ர வித்தமர்களான ஆசார்ய ஸார்வ பௌமர்கள்தாமே இவை செய்யத்தகுமென்றும் ஸமர்த்திக்க முன்வந்ததைக் காணுகின்றோம். ஸ்ரீ வசநபூஷண திவ்ய சாஸ்திரத்தில் (90) " அநந்யோபாயத்வமும் அநந்யோபேயத்வமும் அநந்யதைவத்வமும் குலையும்படியான ப்ரவ்ருத்திகாணுகின்றோமிறே" என்கிற தலையான சூர்ணை ஒன்று நோக்கினுல் போதும். அநந்யோபாயத்வாதிகளான மேற்சொன்ன மூன்றிலும் தலைசிறந்தவர்களென்ற காரணத்தினுலேயே ப்ரபந்நஜன கூடஸ்தர்களாகப் பெற்ற ஆழ்வார்கள் அந்த நிஷ்டை குலையப்பெற்றுல் அவர்கள் த்யாஜ்யர்களே யாகவேணுமே. "ப்ராபகாந்தரம் அஜ்ஞர்க்கு உபாயம், ஜ்ஞானிகளுக்கு அபாயம்" என்றும், "*மறந்தும் புறந்தொழா மாந்தரென்கையாலே அந்ய சேஷத்வம் கழிகையே ப்ரதானம்" என்றும் கல்வெட்டாக நிஷ்கர்ஷித்தருளு மாசார்யர்கள் 'ப்ராபகாந்தர ப்ரவ்ருத்தியையும் தேவதாந்தர ப்ராவண்யத்தையும் ஆழ்வார்கள் பக்கலிலே காணுகிற்பதாகவும்' எழுதிவைத்தால் இதனீ மருமமறியாத பிறர் ஏசும்படியன்றோவுள்ளது. இவ்விடங்களில் விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகள் எவ்வளவு அழகாகத் தெளியவைத்திருக்கிறுரென்பதை பாக்யசாலிகள் அறிய ப்ரஸக்தி யுண்டோ ?

" அப்ராப்த விஷயங்களிலே ஸக்தனுனவன் அது லபிக்கவேணுமென்றிரா நின்றுல் ப்ராப்த விஷய ப்ரவணனுக்குச் சொல்ல வேண்டாவிறே" என்கிற ஸ்ரீவசநபூஷண திவ்யஸூக்தியை உள்ளத்தில் ஆவ்ருத்தி பண்ணப் பண்ண, அந்த ஸூக்தி ப்ரக்ருத விஷயத்தில் நல்ல தெளிவை யூட்டுமே; ஸர்வாத்மநா தமக்குத் தகாத தப்புக் காரியங்களைக் கூசாமல் வெள்காமல் அஞ்சாமல் செய்துகொண்டு திரியுமவர்கள் ஐயோ ! ப்ராப்தமான திவ்ய தேச ப்ராவண்யத்தை இழந்து நிற்குமளவேயன்றிக்கே அநுபவரஸிகர்களான பாக்யசாலிகள் பக்கலிலே ஜுகுப்ஸை கொண்டும் நசிப்பதே ! வம்பர்களின் கூட்டம் வாசலிலே சென்றுல் உள்ளிருந்து வெளியே ஓடிவந்து குதுகலித்துக் காண்பவர்கள் எம்பெருமான்களும் ஆழ்வாராசாரியர்களு மெழுந்தருளக் கண்டால் உள்ளேயோடிக் கதவடைத்துக் கிடப்பதே!. *ஈட்டங்கண்டிடக் கூடுமேல் அதுகாணுங் கண்பயனுவதே* என்கிற பாசுரத்தைக் கற்றுவைத்தும் கேட்டுவைத்துமிருப்பவர்கள் அவ்வடியார்களினீட்டத்தைக் கண்டு வெறுப்பதும் வைவதுமாவதே!. அபவித்திரமென்று நன்கறிந்த கண்ட விடங்களுக்கும் கூசாது செல்லுமவர்கள் ஆலயங்களில் அடியிட அருவருப்பதே!. ஔஷதமென்று பேர்வைத்துப் பறையன் தண்ணீரைப் புட்டிபுட்டியாகப் பருகி ஊன்மல்கி மோடுபருப்பவர்கள் ஸன்னிதித் தீர்த்தங்களைத் தூஷித்து ஆத்மநாசமடைவதே! புத்ர பௌத்ராதிகளைக் கோவில்களுக்கனுப்பி ப்ரஸாத பணியாரங்களைக் கூடைகூடையாக வரவழைத்துண்பவர்களும் ஆனந்த பவனுதிகளிலே அஞ்சாது ஆனந்தமாக வுண்பவர்களும் பகவத் ஸன்னிதிகளைப்பற்றி அநுவதிக்கவும் தகாத அபசப்தங்களை வாரியிறைப்பதே!. இது நிற்க.

திவ்ய தேசங்களிலே ஆழ்வார்கள் என்றைக்கோ ஊன்றினுர்களென்பது கிடக்கட்டும். அந்த திவ்ய தேசங்களின் பெருமையைப் பிள்ளைலோகாசார்யரும் மணவாளமாமுனிகளும் எடுத்துக்காட்டுமழகை என்ன வென்று சொல்லுவோம் ! சிறிது எடுத்துச் சொல்லிக் களிப்போம். ஸ்ரீவசனபூஷணத்தில் (40) " இதுதான் சாஸ்த்ரங்களால் திருத்த வொண்ணுதே விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராய்ப்போரும் சேதநர்க்கு வைமுக்யத்தைமாற்றி ருசியை விளைக்கக்கடவதாய் ருசிபிறந்தால் உபாயமாய் உபாயபரிக்ரஹம் பண்ணினுல் போக்யமுமாயிருக்கும் " என்கிற சூர்ணைக்கு மணவாளமாமுனிகளிட்டருளின வியாக்கியானத்திற்கு விண்ணெல்லாமுண்டோவிலை ? அவ்விடத்து ஸ்ரீஸூக்திகளின் கருத்தைச் சுருக்க

மாக வெடுத்துக் காட்டுகிறோம். நமக்கு ஹிதமூட்ட வந்த சாஸ்த்ரங்களானவை விஷயாந்தரங்களிலே அருசி பிறக்கும் படியாகவும் பகவத் விஷயத்திலே ருசி வளரும்படியாகவும் எவ்வளவோ சொல்லிவைத்திருந்தாலும் துர்வாஸநாபலத்தினால் அந்த சாஸ்த்ரார்த்தங்கள் நமக்குக் கார்யகரமாகிறதில்லை. *சிலம்படியுருவிற் கரு நெடுங்கண்ணார் திறத்தனாய் அறத்தையே மறந்து புலன் படிந்துண்ணும் போகமே பெருக்கி* என்றும் *சுரிகுழல் மடந்தையர் திறத்துக் காதலே மிகுத்துக் கண்டவாதிரிந்த* என்றும், *மாதரார்கயற்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனை* என்றும் சொல்லுகிறபடியே விஷயாந்தரங்களிலே அளவு கடந்த காதல் கொண்டு, யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை யேறிட்டுக்கொண்டு பகவத் விஷயத்தைக் கண்கொண்டு காணவு மிசையாதே வர்த்திக்கிற ஸம்ஸாரிகளுக்கு *போதரே யென்று சொல்லிப் புந்தியிற் புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்தவழகன்* என்கிற படியே தன்னுடைய வடிவழகு முதலானவற்றாலே நெஞ்சைக் கொள்ளைகொண்டு தன்னைக் காணவேண்டாதிருந்த இருப்பைக் குலைத்து, கண்டகண் மாறவைக்க மாட்டாத படி பண்ணி, தன்னை நித்யாநுபவம் பண்ணப் பெறவேணு மென்கிற ருசியைப் பிறப்பித்து, அந்த ருசி பிறந்த பின் *ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்* என்னும் படி தானே உபாயமாகி, இனி பேற்றுக்காகத் திருநாட்டிலே செல்லு மளவும் பார்த்திருக்க வேண்டாமல் *அணியரங்க னென்னமுதினைக் கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே* என்றும் *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே திருமாலிருஞ் சோலைக் கோனே* என்றும் சொல்லுகிறபடியே திவ்ய தேசத் தெம்பெருமான் தானே பரமபோக்யனுமாயிருப்பன்—என்பதாம்.

இப்படிப்பட்ட தன்மைகள் திவ்ய தேசத் தெம்பெருமான்களிடத்திலே இன்று நேற்று உண்டானவையல்ல; *கல்பாநேவ பஹூந் கமண்டலுகளத் கங்காப்லுதோபூஜயத் ப்ரஹ்மா த்வாம்*என்று பட்டாருளிச் செய்தது ஸ்ரீரங்கநாதன் விஷயத்திலானாலும் ஒவ்வொரு திவ்ய தேசமும் அப்படியே அநாதிஸித்தமாதலால் *தேஜோவிசேஷேண ப்ரத்யவாயோ ந வித்யதே* என்று உறுதி கூறவேண்டும்படியான திவ்ய மூர்த்திகளில் ப்ரத்யவாய சங்கை பண்ணுவதுதானும் பெரும்பாதகமன்றோ.

அர்ச்சாமூர்த்தி எப்படி சாஸ்திரங்களுக்குக் கட்டுப்பட்டதோ அப்படி விபவமூர்த்தியும் சாஸ்த்ரங்களுக்குக் கட்டுப்பட்டதுதானே. இதில் ஸந்தேஹமில்லையே. கீதையில் தானே இதைச் சொல்லி வைத்துமிருக்கிறானே. [*வர்த்த ஏவ ச கர்மணி* இத்யாதி.] அங்ஙனம் சாஸ்த்ர வச்யனாகத் தன்னைச் சொல்லிக்கொண்ட பகவான் ஜாரசோர சிகாமணி யென்று பேர்பெற்று நிச்சலுஞ்செய்த தீமைகளை நேரில் கண்டவர்கள் அப்பெருமானை வெறுத்து அகன்றொழிய வேண்டியது தவிர வேறுண்டோ? "இது என்ன ஸௌலப்யம்! இது என்ன ஸௌசீல்யம்!" என்று சொல்லி இப்போது கண்ணீர் சொரியுமவர்கள் அப்போது அந்த சேஷ்டிதங்களை நேரில் காணப்பெற்றால் அஸப்ய சேஷ்டிதன் என்று அருவருத்தே யொழிவர் போலும். அவர்களே சிசுபால கோஷ்டியார்போலும். அவர்களுடைய ஸந்ததியே இன்றைக்கும் இடையறாது வருகின்றது போலும்.

"ஹீநப்ரேஷ்யம் ஹீநஸக்யம் ஹீநகேஹ நிஷேவணம்" என்று இவை மூன்றும் சாஸ்த்ரங்களில் உபபாதகங்களாகப் படிக்கப்பட்டிருக்கின்றன. இவை ராமக்ருஷ்ணவதாரங்களில் பகவானால் செய்யப்பட்டிருப்பது மறைக்கவும் மறுக்கவும் முடியாத விஷயம். *இன்னார் தூதனென நின்றவன ஹீநப்ரேஷ்யத்திற்கு இலக்கானான்; *கூரணிந்த வேல்வலவன்

குகனோடுங் கங்கைதன்னில் சீரணிந்த தோழமை கொண்டவன் ஹீநஸக்யத்திற்கு இலக்கானான்; *விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்திச என்னப் பெற்றவன் ஹீநகேஹ நிவேஷணத்திற் கிலக்கானான். இவைகொண்டு அந்த விபவாவதாரத் திருமூர்த்திகளைப் பாதகிகளென்று த்யஜிக்க என்ன தடையென்று கேட்டால், இப்போது அர்ச்சாவதாரத்தை த்யஜிக்குமவர்கள் ஆமாம் ஆமாமென்று தலையாட்டவேண்டியது தவிர வேறில்லையே. விபவாவதாரங்களில் கண்ட தோஷங்களைவிட அதிகமான தோஷம் அர்ச்சையில் காணமுடியாதென்பது ஸத்யம். அதில் பாதிகூட காண முடியாதென்றும் சொல்லலாம். அங்கு ஹீநகேஹ நிவேஷணம் தான் பண்ணினான்; இங்கு ஹீநர்களைத் தன் கேஹத்திற்கு வரவழைத்துக் கொண்டான். இதில் ஏற்றத்தாழ்வுகளை விவேகிகள் விமர்சித்துக் கொள்வது. தோஷங்கண்டு விடுவதென்றால் பகவத் விஷயத்தில் பற்றக்கூடியதாக அணுவளவும் ஏற்படாது. *ஆகிலும் கொடிய வென்னெஞ்ச மவனென்றே கிடக்குமெல்லே* அடியேன்நான் பின்னுமுன் சேவடியன்றி நயவேன்* என்னும் பரிபாகம் பிறந்தார்க்கல்லது பகவத் விஷயத்தில் ஸம்பந்த கந்தமும் ஸம்பவியாது. அநுபோக்தாக்களான பாக்யசாலிகளை இகழ்வதும் அநுபவ ருசியுடையாரை ஆணையிட்டுத் தடுப்பதுமாயிருந்துகொண்டு கதவடைத்து உள்ளே கிடந்து ‘நாங்கள் பகவத் விஷயாநுபவம் பண்ணுகிறோ’ மென்றால் *ஏதுக்கிதுவென் இது வென்னிது வென்னோ?* என்ன வேண்டுவது தவிர வேறுண்டோ?

ஏரியிலே தீர்த்தம் நிரம்பியுள்ளபோதுதான் வாய்க்கால்கள் பெருகும். ஏரி சுஷ்கமாயிற்றென்றால் வாய்க்கால்களும் சுஷ்கமாகுமென்பதில் ஐயமில்லை. அதுபோல, திவ்ய தேசம் ஸத்தை யழிந்ததென்றால் அதே க்ஷணத்தில் கிருஹார்ச்சையும் ஸத்தையழிந்ததாமென்னத் தட்டில்லை. திருமழிசைப் பிரான் *கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா நீ கிடக்க வேண்டாம்....நீயு முன்றன் பைந்நாகப் பாய்சுருட்டிக்கொள்* என்று சொல்லி யதோக்தகாரி யெம்பெருமானைக் கொண்டு வெளியேறின வளவிலே கச்சி நகர் முழுவதும் இருள்மூடிப் போனதாக இதிஹாஸமுள்ளது. கச்சிப்பதியில் யதோக்தகாரி யெம்பெருமான் ஒருவனேயோ? மற்றும்பல எம்பெருமான்களு மிருந்திலரோ? அருகே திகழும் விளக்கொளி யெம்பெருமானுடைய வொளி எங்கே போயிற்று? யதோக்தகாரி யொருவர் வெளியேறி விட்டால் கச்சிப்பதி முழுதும் இருள் மூடிப்போய் விடுமோ? இதெல்லாம் கட்டுக்கதையல்லவா? என்பாருடைய திரளிலே இனி இவர்களும் சேர வேண்டு மத்தனையே. உண்மை கேண்மின்;—இக்காலத்து வித்யுத் ப்ரதீபங்களை [எலெக்ட்ரிக் லைட்டுகளை]க் காண்கிறீர்களே. ஒரு கொத்து விளக்குமாலையில் ஒரு விளக்கு கெட்டாலும் அத்துடன் சேர்ந்த விளக்குகளெல்லாம் உடனே கெட்டுப் போவதைக் காண்கிறீர்களன்றோ. தீப சக்தி அவற்றிலெல்லாம் வ்யாஸஜ்ஜ்யவ்ருத்தியென்று நன்கு தெரிகின்றது. அப்படியே ஒரு எம்பெருமான் வெளியேறினாலும் அவனோடு கூடவே மற்றையெம்பெருமான்களின் சக்தியும் ஸங்கோச மடைந்து செல்கின்ற தென்பதே தத்துவம். அதுபோலவே, திவ்ய தேசத்தெம்பெருமான் உபாதி விசேஷங்களால் இப்போது வெளியேறிவிட்டானென்றால் க்ருஹார்ச்சைகளும் கூடவே வெளியேறி விட்டதாகவே தேறும். இதைப் பல ப்ரமாண யுக்திகளால் நிலைநாட்ட முடியும். இதற்கென்றே தனியே யொரு வியாஸமெழுதுவோம் பிறகு. இப்போது நாம் காட்டின வளவுகொண்டே தெளிவு பெறுவர்கள் பிராமாணிகர்களான விவேகிகள். “திவ்யதேசத் தெம்பெருமான்கள் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளி விட்டார்கள்; எங்கள் திருமாளிகைப் பெருமாள்தான் தாய்மை குன்றாது தொழத் தக்கவர்” என்னும் மேதாவிகள் நுனிமரத்திலே உட்கார்ந்துகொண்டு அடிமரத்தை வெட்டும் மேதாவிகளையே யொப்பர் என்றதாயிற்று.

க்ருஹத்தினுள்ளே கிடந்து பௌண்ட்ரக வாஸுதேவாநுபவம் பண்ணுகிறவர்கள் தாமும் ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளை விட்டபாடில்லை. * சென்று வணங்குமினோ சேனையர்வேங்கடத்தை * தில்லைத் திருச்சித்ரகூடஞ் சென்று சேர்மின்களே * காழிச்சீராமவிண்ணகரே சேர்மினீரே * என்றாற்போன்ற பாசுரங்கள் வாயில்வந்தால் "ஆழ்வார்கள் இப்படி நியமித்திருந்தாலும் அந்தச் சொற்கள் மாத்திரமே இப்போது நமக்கு உத்தேச்யம்; அர்த்தம் உத்தேச்யமன்று; பாசுரம் பெற்ற திவ்யதேசங்களெல்லாம் அசுத்தங்களாயும் எம்பெருமான்களாலே வர்ஜிதங்களாயும் தொலைந்தபடியாலே நீங்கள் அங்குச் சென்று சேரவேண்டாம்; சென்றாலும் கடைவீதிகளைக் கண்டுவிட்டுக் கோவிலுள் புகாது மீளுங்கள்" என்றே இவர்கள் உபதேசிக்கக் கடமைப்பட்டொழிந்தார்கள்.

ஸ்ரீவசநபூஷணத்தில் (38) "பூர்த்தியையும் ஸ்வாதந்த்ர்யத்தையும் குலைத்துக்கொண்டு தன்னையநாதரிக்கிறவர்களைத் தான் ஆதரித்து நிற்கிற இடம்" என்று அருளிச்செய்கையாலே சாஸ்த்ரார்த்தத் தெளிவற்ற இவர்கள் ஏதோ ப்ரளயம் வந்துவிட்டதென்று மருண்டு திவ்யதேசத்தெம்பெருமானை எவ்வளவு அநாதரித்தாலும் இவர்கள்மீது நசை அவனுக்கு ஒருநாளும் ஒழியாதாகையாலே என்றேனுமொருநாள் இவர்களையுமிழுத்துப்பிடிக்க நேரும். ஆனாலும் *த்வத் ஸர்வசக்தேரதிகாஸ்மதாதே: கீடஸ்ய சக்திர் பத ரங்கபந்தோ!* என்று பட்டருளிச்செய்த கணக்கிலே ஸர்வசக்தனும் பராஜிதனும்படி இவர்களுடைய த்ருட ஸங்கல்ப சக்தியே ஓங்குமாக. மேலேயெடுத்த ஸ்ரீவசநபூஷண ஸூக்தியில் "ஸ்வாதந்திரியத்தை குலைத்துக்கொண்டு" என்றவிடத்து மணவாள மாமுனிகளின் இன்சுவை மிக்க வியாக்கியான ஸூக்தி இதுகாண்மின்;—"தன்னிச்சையொழிய இவற்றைக்குலைக்கைக்கு ஹேதுவில்லாமையாலே குலைத்துக்கோண்டு என்கிறார்" என்பது. இதனால் கையிலங்கு நெல்லிக்கனியாகுமது என்னவென்பதை நாம் விவரிக்கவேணுமோ? அர்ச்சையெம்பெருமானுக்கு ஸம்பத்தோ விபத்தோ எது நேர்ந்தாலும் அது அவனுடைய இச்சையினாலன்றி வேறொன்றினாலும் நேருவதன்று என்பதே ஸ்பஷ்டமாகிறது. இதுமாத்திரமன்று; சிலரை விமுகர்களாக்கி யொதுக்கித் தள்ளுவதும், பலரை அபிமுகர்களாக்கி அருள் பெறுத்துவதுங்கூட அவனுடைய திருவுள்ளமேயென்றும் தேறுகின்றது.

ஆகவே எம்பெருமான் தானாகவே ஒதுக்கித் தள்ளி வைத்திருக்குமவர்களைப் பற்றி அநுசோகிக்க இடமில்லை. அரசர்கள் சில பெருங்குற்றவாளர்களை அண்டமான் தீவு முதலான இடங்களுக்குப் போகவிட்டு நீண்ட நிக்ரஹம் செய்யுமாபோலே ப்ராக்ருதத்திலும் சில வ்யக்தி விசேஷங்களை எம்பெருமான் யாவச்சரீரபாதம் நிக்ரஹிக்கத் திருவுள்ளம் பற்றியிருப்பதாகத் தெரிகின்றமையால் * கிந்து த்வதக்ரே சரணாகதாநாம் பராபவோ நாத ந தேநுரூப:* என்று ஆளவந்தார் பேசின கட்டளையிலே "பிரானே! உன்னடிபணிந்திருந்தவர்களை இப்படி அற நிக்ரஹியாதேகொள்" என்று பிரார்த்திப்பதே ஒவ்வொரு க்ஷணத்திலும் நமது பணியாயிராநின்றது.

நம்முடைய தர்சனமே திவ்ய தேசமாகிற அடிப்படையின் மேலே நிற்கிறது. திவ்ய தேசாவகாஹநத்தை விட்டுப் போதுபோக்க வேணுமானால் அதற்குரிய வழியுமொன்றுண்டு; அதாவது, (1) திவ்ய ப்ரபந்த ஸ்மரணத்தை ஸவாஸநமாக விட்டிடுவது; (2) *நாளும் விழவினொலியோவா* என்னப்பட்ட திவ்ய தேசங்களில் வாஸத்தை அறவே விட்டொழிப்பது; (3) பகவத் விஷயாதி ஸ்ரீகோசங்களை மறந்தும் தொடாமல், வைத்யநாதீயம் ஆஹ்நிககாண்டம் ஆசௌசகாண்டம் போன்ற தர்மசாஸ்த்ர நிபந்தனங்களைக் கொண்டே போது போக்குவது; (4) *தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே* என்றும், *மங்கைய

ராளி பராங்குச முன்னவர் வாழ்வு முளைத்திடுநாள்* என்றும் *மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள்* என்று மிப்புடைகளிலேயுள்ள சந்தைகளைச் சிதைத்தொழிப்பது; (5) ஆழ்வார் திருநக்ஷத்திரமென்றும் ஆசார்யர் திருநக்ஷத்திர மென்றும் கொண்டாடுவதை விட்டிட்டு ப்ராஹ்மண கர்மகாண்டங்களிலே ஊன்றி யிருப்பது; வேதோக்த கருமங்களை ஒன்று விடாமல் செய்து த்ரிஷவண ஸ்நாநாதிகளாலே அக்கிபோல் ஜ்வலிப்பது.........ஆக இப்படிப்பட்ட கருமங்களையும் விட்டு, *திசிதிசி திவாராத்ரம் ஸ்ரீரங்க பாலநகர்மடா:* என்று பட்டருளிச் செய்த கருமத்தையும் விட்டு விச்வகுணதர்ச மங்களாசாஸந பூஷிதர்களாகியே போது போக்கித்திரிவது தகாது தகாது தகாது.

திவ்யதேசாநுபவங்களில் ருசிவிவசர்களாய்த் தளும்பிகிற்குமவர்களைக் குறித்தும் இங்குச் சில சொல்லுகிறோம். சாஸ்திரங்களின் போக்கை உள்ளபடியறிவதற்கு நாம் சக்தர்களல்லோம்; சாஸ்திரப்படி நாம் வர்த்திக்கவேண்டிய நிலைமை யென்ன? நாம் சாஸ்திரங்களை அநுவர்த்தநம் பண்ணுகிறோமா? அதிவர்த்தனம் பண்ணுகிறோமா? என்பதை ஆராய்வாரில்லை. இதைச்சற்று ஆராய்ந்தால் தம்மை உண்மை ப்ராஹ்மணராக நினைத்துக் கொள்ள அவகாசமேயிராது. "யஸ்ய வேதச்ச வேதீ ச விச்சித்யேதே த்ரிபூருஷம், ஸ வை துர்ப்ராஹ்மணோ ஜ்ஞேயஸ் ஸர்வகர்மபஹிஷ்க்ருத:" என்கிற வசனம் நம் ஆசாரியர்களும் கையாண்டது. மூன்று தலைமுறை வேதாத்யயனமும் அக்னிஹோத்ரமுமில்லாதவன் துர்ப்ராஹ்மணனென்றும் அவன் ஒரு கருமத்திற்கும் அர்ஹனல்லனென்றும் முறையிடப் பட்டுள்ளது. கேசகண்டனம் முகக்ஷௌரம் முதலான ஹீநாசாரங்கள் மலிந்தவர்கள் கிடக்கட்டும். வைதிகர்களென்று வழங்கப்படுபவர்களையே யெடுத்துக்கொள்வோம்; அமாவாஸ்யாதி புண்யகாலங்களில் ஐந்து நிமிஷம் இவர்களோடு கூட இருந்தால் இவர்களுடைய வைதிகத்வம் எவ்வளவென்று எளிதாகக் கண்டுபிடிக்கப்படலாம்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் * குளித்து மூன்றனலை யோம்புங் குறிகொள் அந்தணமைதன்னை யொளித்திட்டே னென்கணில்லை * என்று நைச்யாநுஸந்தானமாகப் பேசிக்கொண்ட விஷயம் நம்மிடையில் ஒவ்வொருவரிடத்திலுங் குடிகொண்டுள்ளது. இப்படிப்பட்ட நாம் நம்மைச் சீர்திருத்திக்கொள்ளவேண்டியது அவசியமாயிருக்க எம்பெருமானுடைய அனுஷ்டானங்களிலே குறை காண்பதும் குறை கூறுவதும் தகுமோ? பக்தவத்ஸலனான எம்பெருமான் நம்முடைய தோஷங்களைக் காணக்கண்ணிட்டிருக்கவேணுமென்றும், அதற்குமேல் போக்யமாகவுங் கொள்ளவேணுமென்றும் ஆசைப்படுகிறோம். நாம் அவனிடத்தில் தோஷாபாஸங்களைக் கண்டு வெறுப்பவர்களாயிருந்தால் அவனுடைய வாத்ஸல்யத்திற்கு நாம் எத்தனை காதம் விலகிநிற்கவேண்டும் தெரியுமோ?

பிள்ளைலோகாசாரியர் "வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யா பேக்ஷிதம்" என்று தலைக்கட்டும் சூர்ணையிலே—"இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய்க் குணாநுபவ கைங்கரியங்களே போது போக்காகையும்" என்கிறார். இங்கு மணவாளமாமுனிகளின் அமுத மொழிகள்—"பரமபதத்திலே போய் பகவதநுபவ கைங்கர்யங்களைப் பண்ணுகையாகிற பேற்றில் த்வரை நடவாநிற்கச் செய்தேயும் இச்சரீரத்தோடே யிருக்கும் நாள் * தானுகந்தவூர் * என்கிறபடியே ஸர்வேச்வரனுகந்து வர்த்திக்கிற திவ்ய தேசங்களிலே * கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டுகையாகிற ப்ராவண்யத்தை யுடையனாய், அவ்வோ திவ்ய தேசங்களிலே நிற்கிறவனுடைய கல்யாணகுணாநுபவமும்: அசடியாக கரணத்ரயத்தாலும் அவன் விஷயத்தில் பண்ணும் கைங்கர்யமுமே காலக்ஷேப

விஷயமாம்படி யிருக்கை" என்று. திவ்ய தேசங்களில் குணாநுபவ கைங்கரியங்கள் செய்யப் பெறாதவர்களுக்கு ஸ்ரீ வைஷ்ணவத்வஸித்தி யில்லையென்பது இதனால் ஸூசிக்கப்பட்டதாயிற்று. நாமிருந்த விடத்திலே திவ்ய தேசங்களைச் சிந்தனை செய்துகொண்டு குணாநுபவம் செய்தால் குறையுண்டோவென்று கேட்கலாம். இதற்கு நாம் பலபல ஸமாதானங்கள் சொல்ல வேண்டியவை யுண்டு. தற்காலம் ஒன்றிரண்டு ஸமாதானங்களே சொல்லுகிறோம். பரமபோக்யமாக ரஸிக்க வேண்டிய திவ்ய தேசாநுபவம் ரஸிக்கப்பெறாதவர்களுக்கு ராஸிக்யத்தை யுண்டாக்குவது நம்பணியன்று. இப்படிப்பட்ட அரஸிகர்கள் திவ்ய தேசங்களில் புகாமவிருப்பதே க்ஷேமம். அன்றியும், திவ்ய தேசங்களில் பகவதநுபவம் ப்ரதானமன்று, * தத்பக்தைர் வா ஸமாகம :* என்கிறபடியே *திருமுற்றத்தடியார் தங்களின்பமிகு பெருங்குழுவு கண்டு இசைந்துடனே யிருப்பதுதான் ப்ரதானமாகையால் இதனையுள்ளபடி யறியுமவர்கள் அந்தக் கேள்வி கேட்க ப்ரஸக்தியில்லை.

பிள்ளைலோகாசார்யருடைய தத்வத்ரயத்தின் முடிவு சூர்ணை—"ஸ்வஸ்வாமி பாவத்தை மாறாடிக்கொண்டு அஜ்ஞரைப் போலேயும் அசக்தரைப் போலேயும் அஸ்வதந்த்ரரைப் போலேயுமிருக்கச் செய்தேயும் அபார காருண்ய பரவசனாய்க் கொண்டு ஸர்வாபேக்ஷிதங்களையும் கொடுத்தருளும்" என்பது. இங்கு மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தி—"தன் காரியமும் பிறர் காரியமுமறிய மாட்டாத அஜ்ஞரைப் போலேயும், தன்னைத்தான் ரக்ஷிக்க மாட்டாத அசக்தரைப் போலேயும், தனக்கென்ன வொரு முதன்மையில்லாத அஸ்வதந்த்ரரைப் போலேயு மிராநிற்கச் செய்தேயும், விமுகரையுமுட்பட விடமாட்டாதபடி கரைபுரண்டு செல்லுகிற காருண்யமிட்ட வழக்காய்க்கொண்டு......யதாதிகாரம் சேதநருடைய ஸகலாபேக்ஷிதங்களையும் கொடுத்தருளும்" என்பது. இந்த ஸ்ரீஸூக்தியைக் கண்டு சிலர் கேட்பதாவது, விமுகரையும் விடமாட்டாதபடி கரைபுரண்ட கருணையை யுடையனான எம்பெருமான் இப்போதுள்ள விமுகர்களை வைமுக்யத்தை மாற்றி என் அங்கீகரிக்கவில்லை ? என்று.

இதற்கு நாம் என்னபதில் சொல்லமுடியும்? எம்பெருமான் திருவுள்ளத்தை யாரே யறிகிற்பார்? ஸ்ரீவசனபூஷணத்தில்—பிராட்டியானவள் சேதநனையும் ஈச்வரனையும் உபதேசத்தாலே திருத்துவளென்று சொல்லிவருகையில் "உபதேசத்தாலே மீளாதபோது சேதநனை அருளாலே திருத்தும்; ஈச்வரனை அழகாலே திருத்தும்" என்று அருளிச்செய்திருக்கிறாரே; ஐயோ! இவனுடைய துர்ப்புத்தி நீங்கி அநுகூலபுத்தியுண்டாகவேணுமென்று சேதநன் விஷயத்தில் பிராட்டி பண்ணுகிற பரமகிருபையினாலே அவன் பாபபுத்தி குலைந்து எம்பெருமானை அடிபணிய வந்துவிடுவதாக" மணவாளமாமுனிகளும் அங்கு வியாக்கியானத்திலருளிச் செய்கிறாரே; இது பூர்த்தியாகப் பலிக்கக் காண்கிறோமோ? ஒரு ஜன்மத்தில் பலியாதொழிந்தாலும் மற்றொரு ஜன்மத்திலாவது பலிக்கக்கூடும். திருவாய்மொழியில் * போற்றி மற்றோர் தெய்வம் பேணப்புறத்திட்டு உம்மையின்னே தேற்றி வைத்தது எல்லீரும் வீடுபெற்றாலுலகில்லையென்றே * என்கிற பாசுரத்தில் காட்டியருளின ஸமாதானம் இங்கு நன்கு பொருந்துமென்று தோன்றுகிறது.

மேலே குறித்த பாசுரத்தில் * எல்லீரும் வீடுபெற்றாலுலகில்லையென்றே * என்பதுதான் மருமமாகவுள்ளது. ஆபாதப்ரதீதியில் இதற்கு என்ன பொருள் தோன்றுமென்றால், எல்லாரும் எம்பெருமானை ஸேவிக்கப்பெற்றுவிட்டால் எல்லாருமே வீடுபெற நேர்ந்துவிடும்; அப்போது லீலாவிபூதி அடியற்றுப் போய்விடும்; அங்ஙனம் ஆகாமைக்காகவே எம்பெருமான் சிலரை விபரீத வழிகளில் செலுத்திவைக்கிறான்—என்பதாகப் பொருள் தோன்றும். இதுவன்று பொருள். ஆறாயிரப்படி முதலான வியாக்கியானங்களில் இப்பொருள் நெஞ்சா

நினைக்கப்படவில்லை. உலகில்லை யென்றே என்ற விடத்தில் உலகு என்பதற்கு சாஸ்த்ர மர்யாதையென்று பொருள். * அதோஸ்மி லோகே வேதே ச * என்கிற கீதையிலும் * நகிந்திதம் கர்ம ததஸ்தி லோகே * என்ற ஸ்தோத்ரரத்னத்திலும் லோக சப்தம் சாஸ்த்ர பரமாகவே வியாக்கியானிக்கப் பட்டுள்ளதுங்காண்க. அவரவர்கள் பண்ணின புண்யபாப ரூப கருமங்களுக்குத் தக்கபடியே பலன் கொடுப்பதென்று ஒரு சாஸ்த்ர மரியாதை ஏற்பட்டிருக்கின்றது. முற்பிறவிகளில் எவர்கள் பிரபலமான தீவினைகளைச் செய்திருக்கின்றார்களோ அவர்கள் எம்பெருமானை யணுகாதபடியாகிப் பாபபலன்களை யநுபவிக்கப்ராப்தம். எம்பெருமானை யடிபணிந்து வாழுகைக்கு விரோதியான பிரபல பாபகருமங்களைச் செய்தவர்களும் எம்பெருமானைப்பணிந்து வாழ்ந்துவிட்டால் சாஸ்த்ரமரியாதை கெட்டுப்போகுமன்றே. கொடியபாபங்களைச் செய்தவர்களும் புண்யாத்மாக்களைப்போல் திவ்யதேசங்களிலே யீடுபட்டு வாழ்ந்துபோகப்பெற்றால் "பாபஞ்செய்தவர்கள் பாபபலன்களை யநுபவிப்பது, புண்யஞ் செய்தவர்கள் புண்யபலன்களை யநுபவிப்பது" என்று ஏற்பட்டுள்ள சாஸ்த்ரமரியாதை அழிந்ததாகுமன்றே. அங்ஙனம் ஆகாமைக்காகவே எம்பெருமான் சிலரையோ பலரையோ ஒதுக்கித்தள்ளி வைப்பதாக நம்மாழ்வாரருளிச் செய்தாராயிற்று.

ஆகவே தத்வத்ரய வியாக்கியானத்தில் விமுகரையும் விடமாட்டாத கருணாநிதியாக எம்பெருமானைச் சொல்லியிருப்பதானது—பிரபல பாபம் பண்ணாதவர்களாய் ஏதோ அல்ப ஸ்வல்ப பாபம் பண்ணினவர்களான விமுகர்கள் விஷயத்திலேயாமத்தனையென்று கொள்ள வேணும். இல்லையாகில், * எல்லீரும் வீடுபெற்றாலுலகில்லையென்றே* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தோடு விரோதம் ஸார்ஜிதமாகுமே. ஆகவே, "அந்தகாலம் வரையில் நாங்கள் அந்தகாரத்தில்தான் கிடந்து துவளுவோம்; எம்பெருமானையடிபணியமாட்டோம்" என்று ஆக்ரஹக்ரஹிளஹ்ருதயராயிருப்பார் யாவரும் பரமகருணாநிதியின் கருணைக்கு மெட்டாத மஹாநுபாவர்களென்றதாயிற்று.

இப்படிப்பட்ட மஹாநுபாவர்கள் ஸாதிக்கிறார்களாம்—"இனி விரஜாநதியில் ஸ்நானம் பண்ணின பிறகுதான் * ஸர்வம் ஹ பச்ய: பச்யதி * என்ற கணக்கிலே திவ்ய தேசங்களைப்பற்றி ஸ்மரிக்கவேணும்" என்று. அந்தோ! திருமங்கையாழ்வாருடைய திருமடல்களைக் கனவிலுங் கேட்டறியாதவர்களன்றோவிவர்கள். திருமங்கையாழ்வார் திருவாக்கில் பரமபதம் படுகிறபாடு தெரியுமோ? *சிக்கன மற்றாராலுமுண்டென்பா ரென்பதுதானதுவும், ஓராமையன்றே உலகத்தார் சொல்லுஞ் சொல்* என்று நிர்தாக்ஷிண்யமாகவன்றோ அருளிச்செய்தார். இப்படி ப்ரதிஜ்ஞை பண்ணினது மாத்திரமன்றிக்கே, இதைச் சிறிய திருமடலில் சுருக்கமாகவும் பெரியதிருமடலில் பெருக்கமாகவும் உபபாதித்திருக்குமழகு அற்புதமன்றே.

இந்த ஜாபாலிவாதம் உண்மையில் சாஸ்த்ரார்த்தந்தானோ வென்று சில அரஸிகர்கள் கேட்கக் கூடுமென்று நினைத்து அதற்கும் மறுமொழிகூறி நின்றாராழ்வார்—* அந்நிற்கவரார் முயல்விட்டுக் காக்கைப்பின்போவதே* என்று. "காகமாம்ஸம் சுநோச்சிஷ்டம் ஸ்வல்பம் ததபி துர்லபம்" என்னும்படியான அநுபவமன்றோவது. ஆண்டாளைப்பற்றி மணவாள மாமுனிகள் அருளிச்செய்யும்போது "குன்றாத வாழ்வான வைகுந்த வான்போகந்தன்னை யிகழ்ந்து ஆழ்வார் திருமகளாராய்—ஆண்டாளவதரித்தாள்" என்றார். ஆண்டாள் பரமபத போகத்தை இகழ்ந்து இங்கு திவ்யதேசாநுபவத்திற்கு வந்ததாக எங்ஙனே தெரிகிறதென்னில்; * கோவிந்தற்கோர் குற்றேவல் இம்மைப்பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்?* என்று ஸ்பஷ்டமாக அருளிச்செய்து வைத்தாளே.

ஸத்யமாக வொருவார்த்தை சொல்லுகிறோம்—திவ்யதேசங்களைப் பழித்து இகழ்ந்து அகன்றொழிந்தவர்களுக்கு எத்தனை ஜன்மமெடுத்தாலும் விரஜாஸ்நானம் ஸம்பவியாதே. இது நாம் சொல்லுகிற வார்த்தையன்று; கீதாசார்யன் கல்வெட்டாகச் சொல்லியிருக்கிற வார்த்தை; எங்கேயென்னில், கீதையில் (16–20) *ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா ஜந்மநி ஜந்மநி, மாம் அப்ராப்யைவ கௌந்தேய! ததோ யாந்த்யதமாம் கதிம் * என்று கல்வெட்டாகச் சொல்லியுள்ளதன்றோ. கீழ் ஏழாவது அத்யாயத்தில் (15) * ந மாம் துஷ்க்ருதிநோ மூடா:* என்று ப்ரஸ்தாவித்து இங்கே (16—20ல்) பலச்ருதியோடு தலைக்கட்டிற்றாயிற்று. அங்கு ஸ்வாமி பாஷ்யத்தில் " [illegible] " என்று தொடங்கி இன்சுவை மிக்க விவரணமுள்ளது. பரார்த்தயஜநவிஷயபூதனாய் ஸர்வாராத்யனான எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவர்களாகத் தம்மை யறிந்து கொள்ளாதவர்கள் (1) மூடர்களாம்; அப்படியறிந்துவைத்தும் அந்த எம்பெருமான் பக்கலிலே யீடுபடாதவர்கள் (2) நராதமர்களாம்; அந்த எம்பெருமானுடைய பெருமைகளைச் சிலர் எடுத்துரைத்தாலும் அது அஸம்பாவிதமென்று குயுக்திகளாலே மறுப்பவர்கள் (3) மாயயா அபஹ்ருத ஜ்ஞாநர்களாம்; உள்ளபடி எம்பெருமான் பெருமைகளை நன்கறிந்துவைத்தும் த்வேஷிப்பதே கதியாய் நிற்குமவர்கள் (4) ஆஸுரம்பாவமாச்ரிதர்களாம். " [illegible] " என்று கீதாபாஷ்யமுடிவு இங்கு.

திருவாய்மொழியில் (6—7—4) *கொல்லையென்பர் கொலோ குணம்மிக்கன ளென்பர் கொலோ, சில்லைவாய்ப் பெண்டுகள் அயற்சேரியுள்ளாருமெல்லே* என்பது ஒரு பாசுரம். இப்பாசுரமருளிச் செய்த நம்மாழ்வார் காலத்திலாவது, இதற்கு வியாக்கியானமருளிச் செய்த நம்பிள்ளை காலத்திலாவது ஆலயங்களில் அரிஜன ப்ரவேசமானதில்லை. ஆயினும், பாசுரமும் வியாக்கியானமும் அமைந்திருக்குமழகு காணில், நம்மாழ்வாரும் நம்பிள்ளையும் இப்போதைய நிலைமையை முன்னடியே திருவுள்ளம் பற்றியருளிச் செய்திருப்பதாக நன்கு புலப்படுகிறது. கலங்கினர்க்குத் தெளிவு காட்டும் ஸ்ரீஸூக்திகளேயாயிற்று இங்குள்ளது. நம்மாழ்வாராகிற பராங்குச நாயகி திருக்கோளூரெம்பெருமான் ஸந்நிதியிற் சென்று புகுந்தாளாம். புகுந்தாலென்ன ? இதைப்பற்றித் திருத்தாயார் ஒரு பதிகம்பாடிப் புலம்புகிறாள். ஒன்பதாம் பாட்டில் *சேரிபல்பழி தூஷியிரைப்பத் திருக்கோளூர்க்கே நேரிழை நடந்தாள்* என்று சொல்லியிருக்கையாலே ஆழ்வார் கோவிலில் புகுந்தது பழிக்கிடமானதென்று தெரிவிக்கப்பட்டது. "லோக மெல்லாம்........பழி சொல்லி யிரைக்கும்படியாகத் திருக்கோளூரிலே போனாளென்கிறாள்" என்பது ஆறாயிரப்படி யருளிச்செயல். இனி பெரியவாச்சான் பிள்ளை யருளிச் செயல்—"போக நினைத்தாள், புறப்பட்டாள், தனிவழியே போனாள். தாயைப் போகட்டுப் போனாள், குலத்தைப் பார்த்திலள், அவனைப் பார்த்திலள் என்றாப்போலே சேரியிலுள்ளார் பழிகளைச் சொல்லிக் கடல் கிளர்ந்தாற்போலே கோஷிக்க" என்று. ஊரார் பழி பாராதே கோவிலுக்குப் புறப்பட்டுப் போனாளென்று இப்படி கூறுவதனால் பழிக்கிடமான காரியம் ஆழ்வார் செய்ததாகக் காட்டப்பட்டது,

இதனிடையில் *கொல்லை யென்பர் கொலோ குணம் மிக்கனளென்பர் கொலோ* என்கிற பாசுரமுள்ளது. 'பகவத் விஷயச் சுவடறியாத ஊரார் பழித்தாலும் குணக்ராஹிகள் கொண்டாடும்படியான காரியமிது' என்று இப்பாசுரத்தினால் வெகு சாதுர்யமாக ஸூசிக்கப்படுகிறது. ஆலயப்ரவேசமாவது இதைப்பற்றின சர்ச்சையாவது இங்குச் சிறிதுமில்லை யென்பதை நாமறிவோம். அது கிடக்க; இங்கு நம்பிள்ளையீடு அமைந்திருக்குமழகு ப்ரக்ரு

த்தில் திவ்ய தேச வித்வேஷிகளாயிருப்பார்க்கு நிலமன்றாகிலும் ரஸிகர்கள் உகக்க எடுத்துக் காட்டுகிறோம்.—["கோல்லை யென்பர்கோலோ] கொல்லையென்று வரம்பழிந்த செயலுக்குப் பேர்; இவள் நிஷித்தாநுஷ்டாநம் பண்ணினாள், இவள் வரம்பழிந்த செயல்களைச் செய்தாளென்பர்களோ ? [குணம்மிக்கன ளென்பர்கோலோ] குணாதிக விஷயத்துக்குப் போரும்படி செய்தா ளென்பர்களோ. [கோல்லை யென்பர்கோலோ குணம்மிக்கன ளென்பர் கோலோ] இவள் வ்யதிக்ரமம் பண்ணினா ளென்பர்களோ ? அன்றிக்கே, ஸித்தாந்தம் தன்னையே சொல்லுவர்களோ ? ஓரளவிலே நின்று நிஷேதித்தவற்றைக் கொண்டு இது அப்ராப்தம் என்பர்களோ ? ருசிஸ்வபாவத்தாலும் விஷயஸ்வபாவத்தாலும் இது ப்ராப்த மென்பர்களோ ? சாஸ்த்ரவிதியளவிலே நின்று தடுமாறுவர்களோ ? ஸ்வஸ்வரூபத்தைப் பார்த்துத் தெளிவர்களோ ?.........ஸ்வரூபஜ்ஞானம் பிறந்தால் புறப்பட ப்ராப்தியில்லை; ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யாநுஸந்தானம் பண்ணினால் போய்ப் புக்கல்லது நிற்க வொண்ணாது. விதியைப் பார்த்து கர்ஹிப்பர்களோ? காமவசனத்தைப் பார்த்து நன்றென்பர்களோ ?"

ஆக இந்த ஈட்டு ஸ்ரீஸூக்திகள், லௌகிகர்கள் லாரிபோர்ட்டு என்கிற முறையில் கொள்ளத்தக்கன. திவ்ய தேசங்களில் அபிநிவேசமும் ஆர்த்தியுமுடையார் சாஸ்த்ரவிதிகளில் கட்டுண்டு நிற்கத்தக்கவர்களல்லர் என்பதும், அப்படி கட்டுண்டு நிற்கும் அரஸிகர்களின் கர்ஹையைப் பொருள்படுத்த வேண்டியதில்லை என்பதும் ஈட்டு ஸ்ரீஸூக்திகளால் கல்வெட்டாக்கப்பட்டதென்றுணர்க.

திருமங்கையாழ்வார் திருவிந்தளூர்க்கு எழுந்தருளினார்; அகாலத்தில் (இரவு பத்து மணிக்குமேல்) எழுந்தருளினாற்போல் தெரிகிறது. ஸன்னிதி வெளியில் நின்றுகொண்டு இப்போதே ஸேவைதந்தருள வேணுமென்று துடிக்கிறாராழ்வார்; அர்ச்சக பராதீநாகிலாத்ம ஸ்திதியான எம்பெருமான் என்ன செய்யக்கூடும் ? அர்ச்சக பரிசாரகர்கள் வந்து கதவு திறந்தாலொழிய ஸேவை ஸாதிக்கவில்லானே. அவர்கள் வந்து கதவு திறக்குமளவும் ஏதோ வார்த்தையாடிப் போதைப் போக்குவோமென்று நினைத்த 'ஆழ்வீர்! நீர் நல்ல வேதாந்தியன்றோ ? *ப்ரதிமாஸு அப்ரபுத்தாநாம்* என்கிறபடி அப்ரபுத்தர்களுக்காகவன்றோ நான் கோவில்களில் மூர்த்தி கொண்டிருப்பது. ப்ரஹ்லாதாழ்வான் முதலானார் *ஸர்வபூதாத்மகே தாத! ஜகந்நாதே ஜகந்மயே* என்று சொல்லி என்னை எங்குங் கண்டார்களன்றோ. அத்தனை பரிபாகம் உமக்குமுண்டே; கண்ணை மூடிக்கொண்டு எல்லாப் பொருள்களையும் நானாகவே காணமாட்டீரோ ?' என்றான்; அதற்கு மறுமாற்றமாக அருளிச் செய்கிறாராழ்வார்—

> "நீயெம்பெருமான் நீரெம்பெருமான் திசையுமிருநிலனுமாய் *
> எம்பெருமானாகி நின்றால் அடியோம் காணோமால் *
> தாயெம்பெருமான் தந்தைதந்தையாவீர் * அடியோமுக்கே
> யெம்பெருமா னல்லீரோநீர் இந்தளூரீரே! * (5) என்று.

இப்பாசுரத்தின் சீரிய பொருளைப் பன்னியுரைக்குங்கால் பரமபோக்யமாயிருக்கும். ஆயினும் சுருங்கச் சொல்லுவோம்; [அடியோமுக்கேயெம்பெருமானல்லீரோநீர்] பரவாஸுதேவனாயிருக்கு மிருப்பு நித்யமுக்தர்களின் அநுபவத்திற்காக; வ்யூஹநிலை பிரமன் முதலானாருடைய கூக்குரல் கேட்கைக்காக; ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்கள் அக்காலத்திலிருந்தவர்கட்காயொழிந்தன; அந்தர்யாமியாயிருக்குமிருப்பு ப்ரஹ்லாதாழ்வான் போல்வார்க்காம்; திவ்ய தேசங்களில் ஸந்நிதிபண்ணியிருக்குமிருப்பொன்றே அடியோங்களுக்கு ஜீவனம். ஸம்ஸாரி

களுக்கு முகங்கொடுக்கைக்காகவேயன்றோ இந்நிலை அமைந்தது; குருடர்க்கு ஏற்பட்ட இடத்திலே விழிகண்ணர் புகுலாமோ? விழிகண்ணர்க்கு ஏற்பட்ட இடம் குருடர்க்கு உதவுமோ?

இதற்கடுத்தபாட்டில் * இவ்வுலகத்தில் எல்லாமறிவீர் ஈதேயறியீர் இந்தளூரீரே * என்கிறாராழ்வார். இஃது எம்பெருமானை நோக்கிச்சொன்னதாயிருந்தாலும், இக்காலத்து சாஸ்த்ரநிஷ்டர்களை நோக்கிச் சொல்லுவதாகவுங் கொள்ளத்தகும். ஓ சாஸ்த்ரிகளே! நீங்கள் தர்மசாஸ்த்ரங்களும் பாஞ்சராத்ரசாஸ்த்ரங்களுமறிந்தீரித்தனைபோக்கி திவ்யதேசம் விடவொண்ணுதென்பதை அந்தோ அறிந்திலீர்களே; அதிலும் ஆழ்வாரையே தஞ்சமாகக் கொண்டவர்களுக்கு ஸூதராம் விடவொண்ணுததென்பதைச் சிறிது மறிந்திலீர்களே! என்பதுதான் இப்பாசுரத்தில் விவக்ஷிதம்.

## — உபஸம்ஹாரம். —

திவ்யதேசங்கள் இனி நமக்கு உபஜீவ்யங்களல்ல என்று திடமாகவெண்ணிக் கைவிட்டுக்கையொழிந்தவர்களில் அடியேன் தலைவனாயிருந்தவன். ஆனால் அப்படியிருந்த இருப்பு தவறென்று விரோதிவருஷ ஆனி மாதத்தில் ஸ்ரீபதரிகாச்ரம பகவானருளால் தெளிவுபெற்றேன். தெளிவுபெற்ற விதத்தை யீண்டு ஸங்க்ரஹமாகவெழுதுகிறேன். ஆசார்ய ஹ்ருதயத்தில், சாஸ்த்ரநிஷ்டர்களென்றும் சாஸ்த்ரதாத்பர்ய நிஷ்டர்களென்றும் அதிகாரிகளை இரு வகுப்பாகப் பிரிக்கிறார். (சாஸ்த்ரதாத்பர்ய நிஷ்டர்களென்னும் வகுப்பினரை ஸாரஜ்ஞர் என்றும் குறிப்பிடுகிறார்.) அஸத்யமாய் அநித்யமான வர்ணத்துக்கு அநுகுணமான கர்மத்திலே ஊன்றினவர்கள் சாஸ்த்ரநிஷ்டர்கள்; ஸத்யமும் நித்யமுமான தாஸ்யத்திற்கு அநுகுணமான கைங்கர்யத்திலே ஊன்றினவர்கள் ஸாரஜ்ஞர்கள். * உலகமேத்துங்கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர்மல்லையென்று மண்டியிருப்பவர்கள் கைங்கரியத்திற்கு ஆச்ரயபூதர்கள்; அவர்களே ஸாரஜ்ஞர்கள். திவ்யதேசங்களில் ப்ராவண்யமற்ற மற்றையார் கர்மத்துக்கு ஆச்ரயபூதர்கள். அவர்களே சாஸ்த்ரிகள். தேவதாந்தர்யாமியான ஸர்வேச்வரனை இலக்காகக் கொண்ட கருமங்களிலே ஊன்றியிருப்பார் பராசரபாராசர்ய போதாயநாதிகளைக் கூடஸ்தர்களாகக் கொண்டவர்கள். * நல்லதோரருள்தன்னாலே காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்குய்யும் வண்ணம் * என்கிறபடியே திவ்யதேசஸ்தனான ஸர்வேச்வரனை இலக்காகக் கொண்ட கைங்கர்யத்திலே ஊன்றியிருப்பார் பராங்குச பரகாலயதிவராதிகளைக் கூடஸ்தர்களாகக் கொண்டவர்கள் என்று அந்த திவ்யக்ரந்தத்திலே ஸுவ்யக்தமாகவருளிச்செய்தார். (இப்பங்க்திகளெல்லாம் மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளே.)

இப்படியருளிச்செய்த ஆசாரியர்களின் மரபிலே வருகின்ற நாம் கைங்கர்யத்தை விட்டிருக்க ப்ராப்தியில்லை. முமுக்ஷுப்படி முடிவில் "ஆஸ்திகனாய் இவ்வர்த்தத்தில் ருசி விச்வாஸங்களுடையனாய் உஜ்ஜீவித்தல் நாஸ்திகனாய் நசித்தலொழிய நடுவில் நிலையில்லையென்று பட்டருக்கு எம்பாரருளிச்செய்தவார்த்தை" என்றருளியுள்ள ஸ்ரீஸூக்தியையும் முஹுர் முஹுர் மனனம் செய்ய நேர்ந்தது. ஆகவே ஆழ்வாராசாரியர்களின் உறவை இங்கொழிக்க வொழியாததாகக் கொள்ளுமவர்கள் திவ்யதேசங்களை விட்டு விலகக் கனவிலு மெண்ணலாகாது. திவ்யதேசங்களில் ஒருவர்கூட அந்வயிக்கமுடியாதபடி ஒரு துஷ்காலம் நேர்ந்துவிட்டால் அப்போது பார்த்துக்கொள்வோம். "தர்மஸ்ய க்லாநிர் பவதி" என்றருளிச்செய்தவன் அப்படிப்பட்ட துஷ்காலத்தை ஒருநாளும் உண்டுபண்ணமாட்டானென்றே சாஸ்த்ரவிச்வாஸிகள் விச்வஸித்திருக்க ப்ராப்தம். வைதிகர்களென்று பேர்

பெற்ற சிலராவது திவ்யதேசங்களைக் காத்துக்கொண்டிருக்கும் வரையில் அவர்களோடொத்துவாழவேண்டியது தவிர வேறு வழியில்லை. ஆங்காங்கு சிஷ்டர்களென்று பரிகணிதரான பெரியார் பலர் *உன்றன்னோடுறவேல் நமக்கிங் கொழிக்க வொழியாதென்றுகொண்டு கலந்துபரிமாறும்போது சந்தி சாவித்ரியைக் கனவிலுமறியாதார் சிலர் கடக்கவர்த்திப்பதென்பது இதனாலேயே தங்களுக்கொரு பெருமையை ஸ்தாபித்துக் கொள்ளவாமத்தனை. *பொறியில்வாழ் நரகமெல்லாம் புல்லெழுந்தொழியுமன்றே* என்று, நரகம் புல்லெழுந்தொழியவேணுமென்று பாரிப்பதைவிட்டு திவ்யதேசங்கள் புல்மூடிப்போகவேணுமென்று பாரிக்குமவர்களை *ஆஸுரீம் யோநிமாபந்நா:* என்று கீதாசார்யன் வ்யபதேசித்தானென்றால் இது ஒக்கும் ஒக்கும் என்னத்தகும்—என்று துணிந்தேன்.

இப்படி நாம் எழுதுவதைக்கண்டு, இதென்ன சனியாயிருக்கிறதே யென்று விமுகர்களும் கலந்து பரிமாறத்தொடங்கினால் அவர்களுக்கு "வ்யவஸாயமில்லாதவனுக்கு இதில் அந்வயம் ஆமத்தில் போஜனம்போலே" என்கிற முமுக்ஷுப்படி திவ்யஸூக்தியே நினைப்பூட்ட வேண்டியதாகும்.

வித்வத்ஸார்வபௌமராய் விளங்கும் சில பெரியார்கள் திவ்யதேசங்களில் ப்ராவண்யம் குறையற்றிருந்தும் *தர்மாதர்மதியாகுலம்* என்ற அர்ஜுனன்படியிலே நின்று கலங்கி யிருக்கிறார்கள்; அவர்கள் திருவடிகளிலே பணிந்து ஸவிநயம் விஜ்ஞாபிப்பதாவது, கீதையில் (3—26) *ந புத்திபேதம் ஜநயேத் அஜ்ஞாநாம் கர்மஸங்கிநாம், ஜோஷயேத் ஸர்வகர்மாணி வித்வாந் யுக்தஸ் ஸமாசரந்.* என்னும் ச்லோகத்தைப் பலகாலும் நெஞ்சில் மனனம் பண்ணவேணும். இந்த ச்லோகத்திற்கு ப்ரக்ருதத்தில் என்ன ஸம்பந்தமென்று மருளவேண்டா. இந்த ச்லோகத்தையும் இதன் முன் ச்லோகத்தையும் ஸ்வாமி பாஷ்யத்தோடு நன்கு ஸேவிக்கவேணும். (இந்த ச்லோகங்களும் லாரிபோர்ட் என்கிற வகுப்பில்சேர்ந்தவை) இப்போது திவ்ய தேசங்களை ஸேவிப்பவர்களை அஜ்ஞர்களாகவும் ஸேவியாது விலகிநிற்பவர்களை ப்ராஜ்ஞர்களாகவும் ஆஹார்ய மன்றிக்கே உள்ளபடி கொள்ளுகிறோம். ப்ராஜ்ஞர் அஜ்ஞர்களின் வழியைத்தான் பின்பற்றியாக வேண்டும் என்று கீதாசார்யனும் பாஷ்யகாரரும் வற்புறுத்தி யிருப்பதை நோக்கவேணும். *திகம்பரஜநே க்ராமே ஹாஸ்ய: கௌபீநவாந் நர:* என்றுமுண்டே. *ஸ்ரீரங்கபாலநகர்மடா:* என்றருளிச் செய்தருளின பட்டர் கோயில்காப்பதையும் கர்மயோகமாகவே திருவுள்ளம் பற்றியிருப்பது அசைக்க வொண்ணாததாகையால் *ந புத்திபேதம் ஜநயேத்* என்கிற கீதா சாஸனம் இவ்விஷயத்தில் அவசியம் அநுபாலநீயமேயாகும்.

திருவாய்மொழியில் (7—10—4) *வாய்க்குங்கொல் நிச்சலும்* என்கிற பாட்டின் ஈட்டில் ஒரு பரமபக்தருடைய இதிஹாஸமொன்று அருளிச் செய்யப் பட்டுள்ளது; இளையாற்றுக்குடி நம்பி யென்பாரொரு பக்தர் ஸ்ரீரங்கநாதனுடைய திருநாட்கள்தோறும் கோயிலுக்குவந்து நிரந்தராநுபவம் பண்ணிப் போவராம். போனால் மீண்டும் திருநாள் வருமளவும் அதனையே போதுபோக்காகச் சிந்தித்துக் கொண்டிருப்பராம். அவர் நூறு பிராயம் புகுகையாலே ஒரு திருநாளுக்கு வந்து சேரமாட்டாமற் போயினர். திருமுளைத் திருநாளுக்கே வந்து சேருகிற அவர் பிற்பாடும் வாராமையாலே அவரைப் பெருமாள் தேடிக் காணாமல் "நம் இளையாற்றுக் குடியான் வரவில்லையே, நம் கண்ணாலமன்றோ?" என்று திருவுள்ளம் நொந்திருக்கையில் அந்த நம்பி ஆறாந்திருநாளிலே வெகு சிரமத்துடன் வந்து சேர்ந்தாராம்; வந்து ஒரு மூலையில்நின்று ஸேவித்திருக்கையில் "நம்பீ! நாம் உன்னைத்தேடிக் காண

மல் வருந்திக் கிடந்தோம்; ஒருபடிவந்து சேர்ந்தாயே; நன்று; நாம் உனக்குச் செய்ய வேண்டுவதென்?" என்று பெருமாள் கேட்டருள, அதற்கு நம்பி "தேவரீர் தந்தருளின இந்த சரீரத்தைக்கொண்டு அடியேன் மிகவும் காரியங்கொண்டேன்; [தேவரீருடைய மஹோத்ஸவாநுபவங்களை அபரிமிதமாகச் செய்தேன்.] இனி போக்குவரத்துக்கு யோக்யமாகாதபடி இவ்வுடல் கட்டுக் குலைந்தது" என்று சொல்ல; பெருமாளும் "வாராய்! மெய்யே யிளைத்தாயாகில் இங்ஙனேயிரு" என்று அருளிச்செய்து நடுவில்திருவாசலுக்கவ்வருகே யெழுந்தருளச்செய்தே அந்த இளையாற்றுக்குடிநம்பி திருநாட்டுக் கெழுந்தருளினாராம். இப்படி அர்ச்சாவதாரத் தெம்பெருமான் பல விடங்களில் பல பக்தர்களுக்குப் பல விதமான அநுக்ரஹங்களைக் காட்டியருள்வதுண்டு. எம்பெருமானார் காலத்தில் தான், நம்பிள்ளை காலத்தில்தான், மணவாளமாமுனிகள் காலத்தில்தான் இப்படிப்பட்ட அநுக்ரஹங்கள் நேரும் என்பது கிடையாது. என்றைக்குமுண்டு. இத்தகைய அநுக்ரஹத்திற்குக் கொள்கலமானவர்கள் கூடியநுபவிக்கிறார்கள்; மற்றையோர்கள் இழக்கிறார்கள்.

எது புண்யம்? எது பாவம்? என்பது அவன் திருவுள்ளத்திற்கன்றோ தெரியும். கண்ணனாய்ப் பிறந்தகாலத்தில் தாயெடுத்த சிறுகோலுக்கு உளைந்தோடித் ததிபாண்டனாலே தான் ரக்ஷைபெற்ற காலத்துத் தேடிவந்த யசோதைக்கு 'உன்மகன் இங்கு வந்திலன், அவனை நான் கண்டிலேன்' என்று அத்ததிபாண்டனைக்கொண்டு பொய்சொல்லுவித்து அவனுக்கு ஸாநுபந்தமாக முத்தியளித்தான். அவன்தானே இராமனாய்ப் பிறந்த காலத்தில் ஸத்யவாதியென்று பேர்பெற்ற தசரதனுக்கு அவனுடைய ஸத்யத்தையே பாபமாக்கி நரகபர்யாயமான ஸ்வர்க்கத்திலே தள்ளினான். இங்ஙனே பலபல கதைகள். இவற்றை யெல்லாம் ஆழ்ந்தறிந்த உண்மையான சாஸ்த்ரஜ்ஞர்கள் *செய்த்தலை யெழுநாற்றுப்போல் அவன் செய்வன செய்துகொள்ள* என்றிருப்பர்களேயல்லது மணற்சோற்றிலே கல்லாராயத் துணியார்.

"பத்திமை நூல்வரம்பில்லையே" என்பது ஆசார்யஹ்ருதய ஸூக்தி. நூல் பிடித்துப் பரிமாறுவார்க்கு பகவத் விஷயத்தில் அந்வய லேசமும் அரிதாம். பெரிய திருமடலில் "மன்னு மடலூரா ரென்பதோர் வாசகமும் தென்னுரையில் கேட்டறிவதுண்டு, அதனை யாம் தெளியோம்" என்று ஒரு சாஸ்த்ரத்தை யுதறித்தள்ளி ஒரு சாஸ்த்ரத்தைக் கைப்பற்றுவதாகக் கூறினார். *பாசறவெய்தி அறிவிழந்து எனைநாளையம், ஏசறு மூரவர்கவ்வை தோழீ யென் செய்யுமே* என்கிறார் நம்மாழ்வார். இவற்றின் தாற்பரியமின்ன தென்றறிய வேணும். எம்பெருமானிடத்தி லீடுபட்டவர்கள் அறிவிழந்தவர்களாயும் ஊரவர்கவ்வையை உதறித் தள்ளுமவர்களாயு மிருந்து தீரவேண்டு மென்பதையே ஆழ்வார்கள் முகபேதேந பலகால் பேசியுள்ளார்கள். "அது மடலூருகிற விஷயமல்லவா? அரிஜந ப்ரவேச விஷயமோ?" என்றே தடுமாறுவர் சொற்சுவை பொருட்சுவை யறியாதார்.

ஆழ்வார்கள் மடலூர்வே னென்று அச்சமுறுத்தினவர்களே யல்லது மடலூர்ந்தவர் ஒருவருமிலர். இந்த ப்ரஸ்தாவத்தின் அபதேசத்தினால் அவர்கள் வெளியிடும் தத்துவம் ஒன்றே உணரத் தக்கது; நம் ஸ்வரூபத்தை யழித்துக் கொண்டாகிலும் அவன் ஸ்வரூபத்தை யழித்தாகிலும் அவனை யநுபவித்தே தீரவேண்டும் என்பதே அது.

இவை பின்னும் வயிற்றுள. அவை மேன்மேலும் வெளிவரும்.

---

# அன்பர்களுக்கு அறிவிப்பு.

(ப்ர. அ. பத்ராதிபர்)

அடியேன் இவ்வாண்டு ஸ்ரீ பெரும்பூதூரெம்பெருமானுர் மஹோத்ஸவத்தைப் பூர்த்தியாக ஸபரிவாரனுய் அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. அப்போது ஆனந்த பரீவாஹமாக எழுதப்பட்ட வியாஸம் எம்பெருமானுர் திருநக்ஷத்திரத்தன்று அச்சாகி வெளிவர வேணுமென்று குதூஹலமுண்டாகி காஞ்சீபுரத்தில் அச்சிடுவதற்காக வியாஸத்தை அனுப்பினேன். ஆனல் அவகாசக்குறைவினல் அப்போது அது பூர்த்தியாக அச்சிட்டு முடிக்கப் பெறமல் முக்கால் பாகமே அச்சாகி ஸ்ரீ பெரும்பூதூருக்கு வந்து சேர்ந்தது. அது 9—5—51 தேதியில் (அதாவது எம்பெருமானுர் திருத்தேருத்ஸவத்தன்று) ஸ்வாமி ஸன்னிதியில் காயத்ரீமண்டபத்தில் ஸ்ரீமான் உ. வே. மு. ஸௌந்தரராஜய்யங்கார் (ஹைதராபாத்) ஸ்வாமியின் அக்ராஸனத்தின்கீழ் அமைந்த ஒரு மஹா ஸதஸ்ஸில் வாசித்து அரங்கேற்றப்பட்டது.

அப்போது அடியேன் ஸ்ரீபெரும்பூதூரிலேயே யிருந்தபடியால் காஞ்சீபுரத்தில் அச்சுக்கூடத்தில் ப்ரூப் திருத்தம் செய்ய நமது ஆப்த மணியான ஸ்ரீமான் நல்லப்பா ஜீயப்பங்காரைக் கோரி யிருந்தேன். அவர் ப்ரூப் திருத்தம் செய்யும்போது வியாஸத்தைப் பலகால் வாசிக்க நேர்ந்ததனல் ஆனந்தம் பொங்கி நமக்கு எழுதியனுப்பிய கடிதமொன்று அன்பர்கள் யாவரும் வாசிக்கத் தக்கதென்று தோன்றினபடியால் அக்கடிதம் இங்கு வெளியிடப்படுகிறது.

"ஸ்வாமி ஸந்நிதியில் தண்டன் சமர்ப்பித்த விண்ணப்பம். அடியேன் ப்ரூப்பார்க்க நேர்ந்த வியாஸம் வெகு அழகு. தகுந்த ப்ரமாணங்களை ஆங்காங்கு இன்சுவை ததும்ப நிர்வஹித்திருக்கும் ரீதி வாசாமகோசரம். "இதுவிஷயத்தில் இத்தகைய மனேபாவத்தையே ஸ்வாமி எற்றுக்கொள்ளவேண்டும், இதற்கு அடியேனே புருஷகாரமாக நிற்கவேண்டும்" என்று இருப்து வருஷங்களுக்கு முன்னமேயே மயிலாபூர் S. கோபால ஸ்வாமி ஐயங்கார் (அட்வொகேட்) அடியேனிடம் ஞாபித்தார். ஆனல் "இந்த பொறுப்பை அடியேன் எற்றுக்கொள்ள முடியாது; இதை எம்பெருமானேதான் செய்யவேண்டும்; சந்தர்ப்பம் நேரிடும்போது இதை அவன் கட்டாயம் செய்வன்" என்று அடியேன் அவருக்கு விடையளித்திருந்தேன். இதற்குக் காரணம் "சிஷ்யன் தான் ப்ரியத்தை நடத்தக்கடவன்; ஈச்வரனைக்கொண்டு ஹிதத்தை நடத்தக் கடவன்........" என்கிற ஸ்ரீ வசனபூஷண ஸ்ரீஸூக்தி மனதில் நன்ருக ஊறிக்கிடந்ததே.

நம்முடைய சம்பிரதாயம் வரவுக்கும் போக்குக்கும் இடமளிக்காத ஓர் பாசி படிந்த குளமல்ல. அடியில் குன்ருத ஊற்றையும் உடையது; பழைய ஜலம் போவதற்கும் புதிய ஜலம் வருவதற்கும் இடமளிக்கவும் வல்லது. பாசி படிந்து கெட்டுப்போகும் சமயங்களில் பழைய ஜலத்தை வெட்டி யெடுத்துப் புதிய ஜலத்தைப் பெருக விடுவது என்ஜினியர்களின் கடமை. வித்வான்கள் நம்முடைய மதத்தின் என்ஜினியர்கள். நன்ருக அலங்கரித்த ஓர் பெரிய ரதம் ஓடும்போது, அது, கண்ட டிச்சுகளிலும், பள்ளங்களிலும், மூலை முடுக்குகளிலும் விழாமலிருக்கும்படி முட்டுக் கட்டையும் கொடுக்க வேண்டும். அது நிற்கவேண்டும் சமயங்களில் நெம்புக்கோலையும் கொடுக்க வேண்டும். இத்தகைய காரியத்தை தேவரீர் ஒருவராலேயே செய்ய முடியும். இதைத்தான் தேவரீர் செய்துகொண்டு வருகிறது. ஆகையாலேயே தேவரீர் கோயில்களிலிருந்து விலகி யிருந்த காலத்தோடு அவைகளில் அன்வயித்திருக்கும்காலத்தோடு வாசியின்றி தேவரீரிடத்தில் அடியேனுக்கிருக்கும் ப்ரதிபத்தி ஓரளவும் குறைந்தபாடில்லை. "இவர் அப்போது என் அப்படி யிருந்தார், இப்போது என் இப்படி யிருக்கிருர்?" என்ற கேள்விகளுக்கு இதே ரீதியில்தான் அடியேன் விடையளிப்பது வழக்கம். எவ்வித மாறுபாட்டிற்கும்

இடந்தராமல், வீண் பிடிவாதத்துடன் கிடக்கும் பண்டிதர்களையோ வித்வான்களையோ எவரும் அணுகமாட்டார்கள். அவர்களால் நம் தர்சனத்திற்கு யாதொருபயனுமில்லை. அவர்களைப் போலில்லாமல் என்றைக்கும் பதினறு வயது யுவ குமாரனுக விருந்து வைதிகர் லௌகிகர் என்கிற வாசியில்லாமல் ஸகலருக்கும் தேனையும், பாலையும், கன்னலை யும், அமுதத்தையும் ஊட்டும் காமதேனுவாயும் கற்பக விருக்ஷமாகவும் தேவரீர் நிற்கும் நிலையை தேவரீரின் நடந்த ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவமே உலகுக்கு விளக்கிக் காட்டிவிட்டது.

காஞ்சீபுரம்
10—5—51.

வேணும் தண்டன் சமர்ப்பித்த விண்ணப்பம்,

ந. ஜீயப்பதாஸன்.

நம்முடைய வியாஸத்தைப் பூர்த்தியாக ஆழ்ந்து வாசிக்கப் பெருதவர்கள் ஒரு வார்த்தை சொல்லுவதுண்டு; அதாவது, "இப்போது இப்படி யெழுதுகிற இவரே நான்கு வருஷங்களுக்கு முன்பு **தீண்டாமை தொலையாமை, பகவச் சாஸ்த்ரதத்வம்** முதலான பல புத்தகங்கள் வெளியிட்டிருக்கிறுரே; அந்தத் தமது புத்தகங்களுக்குத் தாமேயா இப்போது கண்டன மெழுதிக் கொள்ளுகிறுர்? இது யுக்தமாகுமா?" என்று.

அடியேனுடைய வியாஸத்தை வரிதோறும் ஊன்றி வாசித்துப் பார்க்குமவர்கள் இப் படிச் சொல்ல முன் வரமாட்டார்கள். மேலெழுந்த நோக்கில் பூர்வோத்தர விரோதம் சங்கிக்குமவர்களுக்கு ஒன்றே சொல்லித் தெளிவு பிறப்பிக்கிறேம். வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களை முமுக்ஷுப்படியில் அருளிச் செய்கின்ற பிள்ளை லோகாசாரியர் "**பேறுதப்பாதென்று துணிந்திருக்கையும் பேற்றுக்கு த்வரிக்கையும்**" என்று இரண்டு அருளிச் செய்கிறுர். துணிந்திருக்கையும் த்வரிக்கையுமாகிற இவை பரஸ்பரவிருத்தம் போல் தோன் றும். அவ்விதமாகவே இங்கும் தோன்றுமாகில் தோன்றுக. ஆழ்வார் தாய்நிலைமையில் நின்று பேசும் பாசுரங்கள் எப்படிப்பட்டவை, மகள் நிலைமையில் நின்று பேசும் பாசுரங்கள் எப்படிப்பட்டவை? என்று ஊன்றிப் பார்க்க வேணும். "அன்னையரும் முனிதிர்" "அன்னை காண கொடாள்" "பெற்றேன் வாய்ச்சொல் இறையும் பேசக் கேளாள்" என்பன போன்ற பல பாசுரங்கள் ஒருவகையான சாஸ்த்ரார்த்தங்களைவெளியிடுகின்றன. "காலம் பல சென்றுங் காண்பதாணை உங்களோ டெங்களிடையில்லையே" "என்னெஞ்சினல் நோக்கிக்காணீர்" என் பது போன்ற பல பாசுரங்கள் மகள் பேச்சாகத்தோன்றி அவையும் ஒருவகையான சாஸ்த் ரார்த்தங்களை வெளியிடுகின்றன. இரண்டையும் ஸஹிக்கும்படியாகவன்றே பகவத் விஷய முள்ளது. சாஸ்த்ரஸரணியில் தலைநின்று நிஷேதிக்கின்ற திருத்தாயார்தாமே "மடமானை யிது செய்தார் தம்மை மெய்யே கட்டுவிச்சி சொல்லென்னச் சொன்னுள் நங்காய்" என்று சொல்லி உடனே சொல்லும் வார்த்தை கர்ணீர் "**கடல் வண்ணரிது செய்தார் காப்பாராரே**" என்று. இதெல்லாம் அர்த்தமற்ற வெறும்பாட்டுக்களல்லவே. ஆங்காங்கு நம்பிள்ளை பெரியவாச் சான்பிள்ளைகள் வாரியிறைக்கும் சீரிய பொருள்கள் நெஞ்சால் நினைப்பரிதால்.

முமுக்ஷுப்படியில் சரமச்லோகார்த்தம் நிர்வஹித்தருளும் புடை எப்படிப்பட்ட தென்று பார்க்கவேணும். ஸகல சாஸ்த்ரங்களும் பூர்வ பக்ஷகோடியிலே நின்று அந்த ச்லோக மொன்று மாத்திரமே ஸித்தாந்த கோடியில் நிற்பதாகவன்றே வியாக்கியானம் செய்யப்படு கிறது. "**இதுக்கு ஈச்வரஸ்வாதந்திரியத்திலே நோக்கு**" (275) என்கிற சூர்ணிகையின் வியாக்கி யானத்திலே மணவாள மாமுனிகள் "சாஸ்த்ரங்க ளெல்லா மொருதலையும் தானெரு தலையுமா யிருக்கிற இந்த ச்லோகத்துக்கு" என்று ஸுவ்யக்தமாக அருளிச் செய்திருப்பதைக் கண் டால் ஸகல சாஸ்த்ரங்களுக்கும் கண்டனமாகச் சரமச்லோகம் அவதரித்ததென்று கொள்ள வேண்டியதாகின்ற தல்லவா? அதை நன்கு ஆராய்ந்து ஸமந்வயப்படுத்தும் மஹா மேதாவி கள் இல்லையோ?

"**உய்யக்கொண்டார் விஷயமாக உடையவரருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது**" என்கிற முமுக்ஷுப்படி சூர்ணையையும் அதன் வியாக்கியானத்தையும் நன்கு நோக்கவேணும். "வித்வானுகையாலே அர்த்தத்துக்கு இசைந்தாய்; பகவத் ப்ரஸாத மில்லாமையாலே ருசி

பிறந்ததில்லை" என்று அந்த உய்யக் கொண்டார்க்கு உடையவர் அருளிச் செய்ததாக மணவாளமாமுனிகள் நிரூபித்தருளுகிறார். இப்படி அதிகாரபேதங்களையும் மதிபேதங்களையும் காணுகின்றோம். "நீணிலா முற்றத்து நின்றிவள் நோக்கினாள், காணுமோ கண்ணபுரமென்று காட்டினாள், பாணனார்திண்ண மிருக்க இனியிவள் நாணுமோ நன்று நன்று நறை யூரர்க்கே" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரம் என்ன அழகு! என்ன அழகு! இதில் எவ்வளவு சாஸ்த்ரார்த்தங்கள் அடங்கியுள்ளன! "பெரிய கனகவரையைச் சிறியகடுகினி லடைத்து வைப்பன்" என்று பிள்ளைப் பெருமாளய்யங்கார் பணித்தபடியே யன்றோவுள்ளது. ஆகவே, ஸஹஸா பூர்வோத்தர விரோத மென்று வாய்திறவார் விவேகிகள்.

முடிவில் ஒரு வார்த்தை அவச்யம் விஜ்ஞாபிக்க ப்ராப்தமாகிறது. இவ்வுலகத்திற்கே திலக பூதராயும் வித்வத்வரிஷ்டராயும் சமதமாத்யநேக கல்யாணகுண நிதியாயும் ஸ்ரீபெரும்பூதூரில் எழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீ. உ. வே. ஆஸூரி மஹாஸ்வாமியை யெதிர்த்தே அடியேன் இந்த வியாஸம் எழுதி வெளியிட்டதாகச் சிலர் பிரசாரம் செய்துவருகிறார்கள். சாந்தம் பாபம்! சாந்தம் பாபம்!. "அம்மானாழிப் பிரானவன் எவ்விடத்தான் யானார்" என்னும்படியான விஷயம். அந்த மஹாஸ்வாமியின் அத்யவஸாய விசேஷங்களை அடியேன் உள்ளபடியறிவேன். அவர் திறத்து அபசாரப்படக் கூடிய மனப்பான்மையை எம்பெருமான் அடியேனுக்கு ஸங்கல்பிக்கவில்லை. இனியும் ஸங்கல்பித்தருளா னென்று உறுதியாகக் கூறுவேன். அதிநிர்மலமான அந்தஃகரணத்தையுடையரான அந்த ஸ்வாமியின் அநுஷ்டானத்தைப் பின்பற்றியொழுக அடியேனால் முடியவில்லையெனினும் அவருடைய அத்யவஸாயத்தில் குறை கூறும் பாதகம் அடியேனுக்கு கரணத்ரயத்தி லொன்றினாலும் நேராதபடி ஸர்வசரண்யன் காத்தருளவேணும். யாவர் சிலர் ஸன்னிதி ப்ரஸாதாதிகளை ஸத்வாரகமாக ஸ்வீகரித்துக் கொண்டே ஸன்னிதி தூஷணங்களில் ஊன்றி யிருக்கிறார்களோ அப்படிப்பட்டவர்களிடத்தே அடியேன் ஜுகுப்ஸையுடையேன். அன்னவர்களில் நோக்காகவே இந்த வியாஸத்தின் பல பகுதிகள் அமைந்துள்ளன. இவ்வபசாரமும் அடியேனுக்கு வர்ஜநீயமா யிருக்கச் செய்தேயும் இதை சரண்யன் ஸங்கல்பித்து விட்டான். ஸர்வாத்மநா பரமபவித்திரரா யெழுந்தருளியிருந்து "இன்றாக நாளையேயாக, இனிச்சிறிது நின்றாக நின்னருளென்பாலதே" என்னுமத்யவஸாயத்தில் சிறிதும் குறையற்ற மஹானான ஸ்ரீமதாஸூரி. பெரிய ஸ்வாமியை இலக்காகக் கொண்டு இந்த வியாஸமெழுதப்பட்டதாக துஷ்பிரசாரம் செய்வாருடைய சொல் வலையிலே உலகம் சிக்கவேண்டா வென்று பிரார்த்தித்து நிற்கிறேன்.

* அந்தோ வடியேனுனபாதம் அகலகில்லேனிறையுமே * என்ற ஆழ்வார்க்கும் மேலாக திவ்யதேசாநுபவங்களில் ஈடுபட்டிருந்த அடியேன் முப்பது மாதகாலம் அகன்றிருந்தே னென்பதை மறவேன். அப்போது அடியேன் மனதிலிருந்த எண்ணத்தையும் மறவேன். அந்த நிலை அடியேனுக்கு என்றைக்குக் குலைந்ததோ அன்றைக்கே மற்றெல்லார்க்கும் குலைய வேணுமென்று நினைக்கிற மூர்க்கனல்லேனடியேன். வைமுக்யமோ ஆபிமுக்கியமோ எல்லாம் எம்பெருமானிட்ட வழக்கு. இதை ஸ்வாநுபவத்தினால் நன்கறிந்தவனடியேன். திவ்யதேசவிஷயமாக அவாச்யங்களைச் சொல்லும் ஆஸுர ப்ரக்ருதிகளே நமது வியாஸத்திற்கு இலக்கு.

---

## சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

கிரமப்படி இந்தமாதத்தில் வியாக்கியான ஸஞ்சிகை வெளியிட வேண்டும். ஈடுமுப்பத்தாறாயிரப்படி எட்டாம்பத்து வெளிவரவேண்டிய மாதமிது. அது ஸித்தமாகியுமுள்ளது. ஆனாலும் அதனை வெளியிடாதது, பலர் சந்தாப்பணம் செலுத்தவில்லை யென்பதுபற்றியே. 10 ரூபாய் சந்தா செலுத்தினவர்களும் 2—8—0 சந்தா செலுத்தினவர்களும் மிகச்சிலரே யாவர். செலுத்தாதவர்கள் விரைவில் செலுத்த வேணுமென்று பிரார்த்திக்கப் படுகிறார்கள். சந்தா செலுத்தாதவர்களுக்கு அடுத்த மாதம் எதுவும் அனுப்பப்படமாட்டாது.

இப்படிக்கு,

மானேஜர்—ஸத்கிரந்த ப்ரகாசந ஸபை.

# கடிதங்கள்.

காஞ்சீபுரம் ஸ்ரீ அழகிய மணவாள ஜீயர் ஸ்வாமி மடாதிபதியாக எழுந்தருளியிருந்த ஜீயர் ஸ்வாமி இரண்டொரு வருஷ காலமாக மேல் கோட்டை யென்னும் திருநாராயண புரத்தில் எழுந்தருளி யிருந்தார். சில காலம் திருமேனி பாங்கில்லாமலிருந்து 5-4-'51 தேதியில் திருநாராயணபுரத்தில் கல்யாணிக்கரை மடத்தில் திருநாட்டுக் கெழுந்தருளினார். பிறகு பூர்வாச்ரமத்திருக்குமாரர் அவ்விடம் வந்து திருவத்யயநாந்தமான சரமகைங்கரியங்களை யதோக்தமாக நடத்தினர். ஷை மடத்திற்கு உத்தராதிகாரியை நியமிப்பது மடத்து சிஷ்யர்களின் மஹாஜனஸபையைச் சேர்ந்ததாகையாலும், அந்த நியமனமும் காஞ்சீபுரத்தில் நடைபெற வேண்டியதாகையாலும் திருநாட்டுக்கெழுந்தருளின ஸ்வாமி உத்தராதிகாரியை நியமித்தருள ப்ரஸக்தி யில்லையாயிற்று. ஆனால் அந்த ஸ்வாமி பரமபதிப்பதற்குச் சில நாள் முன் ஸாதாரணமாக அவரிடம் த்ரிதண்ட காஷாயங்களைப் பெற்றுக் கொண்டு துர்யாச்ரமியான ஸ்ரீ. உ. வே. கோபாலாசாரியர் ஸ்வாமி யென்பவர் தாமே ஷை மடத்திற்கு உத்தராதிகாரி யென்று சொல்லிக்கொள்ளுகிறார். இவ்விஷயம் சென்னை ஹிண்டுரிலிஜியஸ் எண்டோமெண்டு கோர்ட்டு விசாரணையிலிருப்பதால் இதன் தத்துவம் பிறகு வெளியாகும். ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனபத்ரிகை 41-ல் ராப்பரில் இவ்விஷயம் எழுதப்பட்டு வருகையில் "இந்த ஆஸ்தானத்திற்கு, பூர்வாச்ரமத்தில் ஸ்வாமியின் சிஷ்யராயிருந்த ஸ்ரீ. உ. வே. வேதாந்த வித்வான் திருவாய் மொழியாச்சான் ஸம்பத்குமாராசாரியார் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீவாதி கேஸரி அழகிய மணவாள ஸம்பத்குமாரராமாநுஜ ஜீயர் என்று திருநாமம் பெற்று நிர்வஹித்து வருகிறார்" என்று வெளியிடப்பட்டிருக்கின்றது. இது முற்றிலும் அபத்தம். வேதாந்த வித்வான் திருவாய்மொழியாச்சான் ஸம்பத்குமாராசாரியர் என்பவர் திருநாராயணபுரத்தில் எழுந்தருளி யிருப்பது மாத்திரம் வாஸ்தவம். ஆனால் அவர் ஷை மடத்து சிஷ்யருமல்லர். அவர் ஜீயர் பதவியை ஏற்கவுமில்லை. இன்றைக்கும் க்ருஹஸ்தராகவே ஸேவைஸாதிக்கிறா ரென்பதை உலகம் காணலாம். இப்படி பச்சைப்பசும் பொய்யான விஷயத்தை எதற்காகப் பத்ரிகை மூலம் வெளியிடுகிறா ரென்பது விளங்கவில்லை. வெகு தூரதேசத்திலுள்ளவரான பத்ராதிபர் யாரோ தப்பாகத் தெரிவித்ததை நம்பி வெளியிட்டு விட்டார்போலும். பரமபதித்த ஸ்வாமியின் சரமச்லோகங்களில் ஒன்றில் குருவாஸரே என்றும், மற்றொன்றில் பௌமவாஸரே என்றும் போட்டிருக்கின்ற மேதாவிகளே இப்படி தகவல் கொடுத்திருப்பார்களென்று நினைக்கிறேன். ஒரு வ்யக்தியை மற்றொரு வ்யக்தியாகக் குறிப்பிடுவதென்கிற வாஸனை இன்னமும் அநுவர்த்தித்து வருகிறதே யென்று விசனிக்கிறோம். இந்த வ்யக்தி மாறாட்டத்தையும் ஸ்தாபிக்க முயற்சி செய்யாமல் உண்மையைத் தெரிந்து கொண்டு திருத்தம் வெளியிட வேண்டு மென்று பிரார்த்திக்கிறேன்

இப்படிக்கு

**நல்லார் நாராயணையங்கார்,**

திருநாராயணபுரம்

(ஷை மடத்து சிஷ்யர்களில் ஒருவர்)

(இது அந்த பத்ராதிபருக்கு அனுப்பியதின் நகல்.)

## 2

நிகழும் விக்ருதிவருஷ சித்திரைமீ வெளிவந்த ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்திரிகையில் திருநாராயணபுரம் வேதாந்த வித்வான் திருவாய்மொழியாச்சான் ஸம்பத்குமாராசாரியர் அழகிய மணவாள ஸம்பத்குமார ராமாநுஜஜீயராகி மடாதிபதித்வத்தை நிர்வஹித்து வருவதாக பிரசுரம் செய்யப்பட்டிருக்கிறது. ஷை ஸம்பத்குமாராசாரியர் ஸ்வாமி அடியேனுக்கு மாமனார்முறையில் சேர்ந்தவர். அடியேனுடைய க்ருஹத்தின் ஏகதேசமான திருமாளிகையிலேயே அந்த ஸ்வாமி அத்யாபி க்ருஹஸ்தராகவே ஸேவை ஸாதிக்கிறார். அவர் உத்தமாச்ரமத்தை ஸ்வீகரித்ததுமில்லை, மடாதிபதியானதுமில்லை, அவர் மடத்து சிஷ்யருமல்லர். இப்படி தப்பான செய்திகளை வெளியிடுவது பத்திரிகைக்கு அழகல்ல வென்பதை விஜ்ஞாபித்துக் கொண்டேன்.

இப்படிக்கு,

திருமலை நல்லான் சக்ரவர்த்தி நரஸிம்ஹாசாரியர்.

மேல்கோட்டை.